ஆகத்திற்கலந்தகேள்வனகன்றமையுளதென்றுன்னப்
பாகத்திற்படர்கொம்பில்லாப்பசுங்கொடிதளர்ந்ததேபோல்
மேகத்திற்பிறவாமின்னின்மேனியானதுநுடங்க
மாகத்திற்பறவாவன்னமலைதருநடையுமல்க. 27

தாதைதன்வரவுகண்டததைமலர்க்கூந்தற்பாவை
போதருமுவகையெய்திப்புக்கெதிர்வணங்கிப்பொன்னி
னாதனமளித்துநிற்பவளையனுண்மகிழ்வுகூர்ந்து
ஏதமிலாசிகூறியிருவெனவிருத்திப்பின்னர். 28

மான்றவிர்மதியமன்னமங்கைதன்முகத்தைநோக்கித்
தேன்றருகிளவியோயுன்றிருவுளகருமமொன்றைச்
சான்றுணர்வுடையநும்பாற்சாற்றுதல்கடமையென்னு
வூன்றியவுளத்தினோடுமுற்றனனுறுதிநோக்கி. 29

அன்னநற்கருமம்யாதென்றறிதரவிழைதியாயி
னின்னருமணமேயாகுநிகர்சொலற்குரியோர்தன்னைத்
துன்னுமெப்புவனத்துள்ளுந்துணிதரற்கரியவாற்றாற்
கன்னிநின்கருத்தையெம்பாற்கரையெனக்கழறினானால். 30

செயற்கருந்தவத்தோனின்னசெப்பலுமுணர்ந்துசேந்த
கயற்கருநீலவாட்கட்காரிகைகருத்தினோர்ந்து
மயற்கறைபகலநோற்றமனத்தினையறைந்தமன்ற
லியற்பெரும்புவியின்மக்களியைந்திடற்குரியரேயோ. 31

புன்னெறிப்புணர்ப்பினோரைப்பொருளெனமனத்துட்கொள்ளா
வன்னெறியுடையேன்மற்றம்மலரயன்றுருவநீண்ட
சென்னியர்தமையலாமற்செறிதரவிரும்பினுட்செம்
பொன்னியல்மணிகடம்மைப்பொதிதரற்கிசையுமோதான். 32

செய்தவமிழைப்பல்பன்னாட்செல்கினுஞ்சிதையாவன்பிற்
கைதவங்கழியநோற்போர்க்குவந்தருள்கருணைவாரி
யெய்தலனாகியென்முன்னிரங்கலனாகிலுள்ளம்
பெய்தழற்குளித்தலன்றிப்பிறிதொன்றுகருதல்செய்யேன். 33

அன்னதாற்பேதையெய்துமருங்கடிபொருட்டினேது
முன்னுதலேதமல்லாலுறும்பயனிலதாநிற்க
வென்னெடுந்தோற்றமேயவெழில்வளர்குவவுத்திண்டோள்
முன்னவர்க்கினியமன்றல்முடிப்பதுமுறையதென்றாள். [illegible]

அணங்கிவைகூறக்கேட்டவருந்தவன்மகிழ்ந்துதன்னு
ளுணங்குநுண்ணிடையோயுன்றனுளக்கருத்திதுவேயாகி
லிணங்குவதன்றிமாறாயிசைப்பதொன்றுளதோமற்றிக்
கணங்கிளர்குமரராற்றுங்கடியினைக்கருதல்மாண்பே. 35

கற்படும்வயிரத்திண்டோட்காளையர்தகுதிக்குற்ற
வற்படுங்குழலினாரையறிதனந்திறத்ததன்றாம்
விற்படுங்கனகமேருவிலங்கலானருளின்யாவும்
பொற்பொடுமியையுமென்னாப்புலம்படவாய்ந்துபின்னர். 36

குமரரைவருகவென்னக்கூயினனுமர்கட்கெல்லாஞ்
சமரவேல்விழியினாரைச்சார்தரும்வதுவைதன்னை
யமைதரற்குரியகாலமடுத்ததிங்கதனையாற்றச்
சமைதரும்வினையமொன்றுசாற்றுவலினிதுகேண்மின். 37

எல்லியும்பகலுந்தேவரிருபுறமிறைஞ்சத்தெய்வ
வல்லிதன்விழிகுளிப்பவளர்மணிமன்றுளெந்தை
புல்லியகருணையோடும்புதுநடங்குயிற்றுநின்ற
தில்லையம்பதியிற்சென்றுதிருவருள்மனத்துட்பேணி. 38

இம்மையிற்பயன்களியாவுமெளிதருள்புரியகோர
மெய்ம்முகத்தடைந்துசின்னாள்விழுத்தவம்புரிதிராயின்
மைம்மலிகண்டத்தெந்தைமகிழ்ந்தெதிர்போதலுற்று
நும்மனக்கருத்தையங்கணுவன்றிடின்முடிக்குமன்றே. 39

ஈதலாலுறுதிவேறின்றியலுறமுயல்திரென்னப்
போதவாய்முனிவன்கூறப்புனைமலரடிகள்போற்றிச்
சீதவான்மதியச்சென்னிச்சினவிடைக்கடவுளன்பர்
போதுலாம்பொழில்சூழ்தெய்வப்புலிநகரடைதலுற்றார். 40

சிந்தனைப்படலம் முற்றிற்று.

---

## மணம்பெறுபடலம்.

கன்றுருக்கொடுநந்திவள்ளல்கனிந்துபூசையியற்றிட
நின்றுநல்லருள்செய்துபுற்றுளமர்ந்தநின்மலனைத்தொழா
வொன்றுபொன்னொடுபன்மணிக்குலமாடிமைப்பவொதுக்கிநீள்
குன்றரக்கருமாநதிப்புனலாடினார்மகிழ்நீடினார். 1

கள்ளவாவியவண்டினம்படர்காமர்தாமரைமென்றவி
சுள்ளவாவியவோதிமம்புடையுற்றமாமகிநீழல்கண்
டள்ளுநீர்விழலுற்றகண்டமெனத்தியங்கியணைத்திட
வுள்ளுறுமையினஞ்சியன்றெனவோடுநீர்வயலூடெலாம். 2

தாதவிழ்ந்திடுநீலமெல்லிதழ்தாலுவிற்கொடுமென்றதன்
கோதுமிழ்ந்தசைவுற்றமென்னடைகொண்டுநீர்வயலேகுசூல்
மேதியின்றலைவண்மருப்பிடைமேவியின்பெடைதன்னொடு
மோதுவெண்குருகின்குலங்களுலாவயர்ந்திடுமோர்புறம். 3

கொண்டவன்பர்தணந்தகாலைகுலைந்திடத்துயர்செய்தலின்
முண்டகங்கெழுநீலமாதிகள்முற்றிடச்செயறீதென
வண்டுகிண்டியதொங்கலோதியர்வாரிருங்களைதீர்வயற்
றொண்டைமண்டலவெல்லைபின்படவெய்தினார்தொழுதென்றிசை 4

ஆடலார்புரமட்டசேவகனாருறும்மதிகைப்பதி
யோடுபற்பலதானமேவியுமும்பரார்தொழுமன்பர்செம்
பாடலாரிருவோர்தமைத்தருபண்பையுங்கொளுமாநடு
நாடெனத்தகுநாடினுட்புறநண்ணினார்வினைமண்ணினார். 5

விடுசரத்தினில்வேகமுற்றெதிர்மேவியின்பருள்பெண்ணையோ
டடிகளப்பர்கறைக்குமேவரவருள்சுரந்திடுகெடிலமென்
றிடுபெயர்க்கிசைவாயசீர்நடுநாடினப்புறமேகியே
கடுநிலைப்படுகண்டர்தப்பதியெல்லைகண்டனர்காதலின். 6

ஆலைவாய்வருசாறுபாயவளர்ந்தபைம்புயலாருமஞ்
சோலைவாய்வருமஞ்சுரும்பர்சுழன்றுதன்றுணையெய்திடும்
வேலைவாயெதிர்கொண்டுமென்மலர்வீழ்மதுப்பருகாதிறை
மாலைமேவளவுந்தனித்துளம்வாடுமங்கையர்மானுமே. 7

கேகயங்களியெய்தியன்புகிளைப்பவுற்றெதிர்மாநடந்
தோகையங்கணெழிற்கலாபம்விரித்தவாடனுடங்குதல்
பாகமங்குமைமாதுகண்டுபயன்கொளும்படியன்பினால்
மாகமங்கணியற்றுமெந்தைதன்மாநடத்தினைமானுமே, 8

நித்திலத்தினிரைத்தகோவையுநேரில்செம்பவளச்செழுங்
கொத்துநாலவமைத்துபச்சைகுயிற்றுதூணமிசைப்பட
கத்திகைக்குழலார்மணம்பெறுகாவணத்தினையொக்குமாற்
சித்திரக்கமுகஞ்செறிந்துயர்செல்வமல்கியசோலையே, 9

முருகுதிர்த்தபலோடவின்னறைமொய்த்தளிக்குலமுண்டுசூழ்
மரகதச்சுடர்சோலைமென்னிழல்மாடெறிந்தவினொன்றுமந்
தரகதிக்கணியங்குறுந்தபனன்சயந்தனமேவுமேழ்
குரகதங்கள்பசந்ததன்றிகுறிக்கவேறயலியாவதே. 10

நச்சுவேல்விழிமாதரார்களைநம்பிநீர்மணநண்ணுதல்
நிச்சயமிவணெய்துவீரெனநீடுமன்பினிசைத்தல்போற்
பச்சிளங்கிளிவாய்பகர்ந்திடவண்டுபாணியிசைத்திட
விச்சையின்மயிலாடல்செய்யவெழுந்தழைத்தனகோகிலம். 11

இன்னறைப்புனல்சிந்துகொண்டலிறுத்ததன்மையதோவெழிற்
பன்னிறத்தமலர்க்கணம்பொழிபாய்முகிற்குலமுற்றகொல்
என்னவென்னவியப்பமண்ணிலிருஞ்சினைப்பொழிலெய்திய
அன்னிறப்பொழிறன்னலம்பலகண்டளைந்தனரன்பினே. 12

பங்கயங்குமுதங்கிளர்ந்தெழுபானலம்படர்வள்ளைவெண்
சங்கமுந்துவராலினங்கயல்சைவலந்திகழ்தண்கிடை
பொங்குறுங்களிவண்டினங்கள்புணர்ந்தவின்னபொழுக்கமின்
மங்கைமார்தமையொப்பதென்றுமதிப்பநின்றனவாவிகள். 13

கோலவாவியினீரினுட்படிவுற்றவோர்கொடிநுண்ணிடைச்
சேலவாவியகண்ணியாளிருசீறடித்தெரிதன்மையால்
மூலவாவியினுள்ளருமென்கொலலர்ந்தமுண்டகவியெனப்
பாலவாவியவோதிமங்களயிர்த்துநோக்குவபாலெலாம். 14

நீர்நிறுத்தியவார்தடத்துணிறைந்ததண்புனலாடுமோர்
கார்நிறுத்தியவோதியாள்முகமாடுகண்டுழல்கஞ்சமுட்
போர்நிறுத்தியநெஞ்சினேடுபொருமலின்னல்புரிந்திடுஞ்
சீர்நிறுத்துவபோலும்வார்கொடிசெய்யதாள்கள்பிணித்தலே 15

பஞ்சுமஞ்சியமெல்லடிப்புரள்பானலங்களெருத்திசெங்
கஞ்சமிஞ்சியவாரிரும்புனலுட்கருங்குழல்மூழ்கலுங்
துஞ்சுமஞ்சிறைவண்டினங்கள்சுழன்றுமீதெழல்சூழ்ந்துளோர்
சஞ்சிதங்கழலச்சிவன்கழல்சார்திறத்தினையன்னதே. 16

வெள்வளைக்குலமுத்தினம்பொழிவெண்ணிலாவிடையெல்லியும்
புள்வளைந்திசைபாடியெய்தவலர்ந்துபொங்கிமிகுந்தசெங்
கள்விளைத்திடுநீலமாதிகள்காதலன்பர்களெய்துதோ
ழுள்விளைத்திடுமின்பநல்கியுவக்குமங்கையரொக்குமே. 17

கானநாடியகற்பகப்பொழினிழலெற்களியாடுறுஞ்
சோலைநாடியவார்குழற்சுடர்வாணுதற்றெரிவைமென்கர
வானநாடியர்தாமியற்றிடுமாசொழிந்திடவேவிருந்
தானநாடியுறப்பயன்றருந்தண்டடங்களனந்தமே. 18

உம்பரார்முடிதாழமண்ணிலுயர்ந்தகோபுரநான்கினின்
செம்பொன்மாமுடிகண்டுசிந்தைகனிந்துசேணிவிறைஞ்சியே
அம்பமால்களிறன்னகாளையர்கண்பெறும்பயனுற்றுகா
ரம்புராசியிவர்ந்திளைத்திடுமாரவின்புறமண்மினார். 19

குடதிசைக்கணியங்குமாதவர்கோடிகோடியிழிந்தெனப்
படுமயக்குறவேயவிர்ந்தொளிர்பைம்பொன்மாமணியிஞ்சியி
னடுவினிற்றிகழ்வுற்றருங்கதிர்ண்ணுவித்திடுமாமென
வடதிசைப்படுவாயில்கண்டுவணங்கியுள்புகலுற்றனர். 20

தீதிலந்தருமும்மலங்கள்செறிந்தசிந்தையர்கண்டிடாப்
பாதனம்பலமீதுநின்றுபயின்றிடுந்தொழில்பார்மினென்
றோதுமுண்மையைநின்றுணர்த்துவதொப்பவானிடையாடுறுங்
கேதனங்களளப்பிலாதகிளர்ந்தசைந்திடுமெங்கணும். 21

பண்டுபல்பவமாயடைந்திடுபாதகச்சுமையற்றிடத்
தொண்டர்மெய்யிலணிந்துவப்பதுதூயநீற்றணியேயெனக்
கொண்டவண்ணமுடற்குளிப்பவயக்கியிட்டதொர்கொள்கையின்
வெண்டளத்தினியன்றமாளிகைவீதியெண்ணிலவாமரோ. 22

முந்தைநாளிலுணர்த்துமாசிரியன்முனிந்திடவேயெழிற்
சந்தையோதுறுமைந்தர்சொன்முறைசாற்றுருமலயர்த்தலுஞ்
சிந்தைதேறவவர்க்குமாடுசெறிந்தகிள்ளைகளோதுறுஞ்
செந்தமிழ்க்குரியோர்வியன்மறைதேரிடங்களுமிக்கதால் 23

நார்பொழிந்திடுசிந்தையோடுநயம்பொழிந்திடுமின்சொலும்
நீர்பொழிந்திடுகண்ணும்வெண்பொடிநேர்பொழிந்திடுமேனியுங்
கார்பொழிந்திடுகண்டர்செய்யகழல்பொழிந்திடுநெஞ்சுமாய்ச்
சீர்பொழிந்திடுமெய்ம்மையன்பர்செறிந்தவீதிகளெங்கணும். 24

பண்மலர்ந்திடுபாடலோதைபயன்கொள்வாணியவோதையும்
விண்மலர்ந்திடுவேதவோதையும்வேள்வியார்மனுவோதையு
மண்மலர்ந்திடுமன்றலோதைவயங்குமும்முரசோதையுங்
கண்மலர்ந்திடவுண்மலர்ந்திடவகன்றணர்ந்துயர்செல்வனர். 25

வண்டலம்பொலிமாமலர்க்கரவண்டலம்பொலிவாய்மெல
விண்டலம்பொலிமேகலைப்பணிமென்சிலம்பினலம்பொலி
கொண்டவம்புலிசென்னியார்புகழ்கூறுகிள்ளையலம்பொலி
மண்டலம்பொலிவெய்துமின்னின்வயங்குமங்கையர்பாலெலாம் 26

மன்னுமம்பலவாணராடல்மனக்கொளன்பினர்மாதவர்க்
கன்னசாலைகளாடல்செய்குறுமன்னசாலைகளாய்மணிச்
சொன்னசாலைகளோமசாலைகள்சோர்விலாரணசாலைக
ளின்னசாலைகளின்னசாலைகளென்றெவன்கொலிசைப்பதே. 27

ஆகுதிப்பெயுநெய்யெழும்புகையாய்பலர்சநறும்புகை
சாகைவார்குசையின்செழும்புகைதையலார்குழலின்புகை
பாகசாலையினுள்ளெழும்புகையாயவிங்கிவைபம்பிவிண்
மேகசாலமிழிந்திடப்புவிவிண்ணவர்க்குலகெய்துமே. 28

பொன்னின்வேதிகைதோறிலங்குவபூரணக்கலசம்புகழ்
முன்னுவாயில்கடோறிலங்குவமுத்தம்வித்துருமத்தொடர்
மன்னுபந்தர்கடோறிலங்குவவாழைபூகமலர்த்தொடர்
துன்னுவீதிகடோறிலங்குவதூயவானவரின்றொடர். 29

வாளரத்தவயிற்கொடுந்தனுவண்குமிழ்க்குமுதங்கொடு
சாளரப்புழைதோறிலங்குவதண்ணிலாமதியின்றொடர்
நீளிடைப்படுதாமவீதியினின்றிமைப்பனபன்னிறக்
கோளிரத்தினவாரமோடுகுலாய்பல்பணியின்றொடர். 30

எண்ணறும்பல்வளங்களின்னவியைந்தயாவுமுவந்துசீர்
மண்முதற்படுமீறிலீரிருபூதமாதிவழங்குயிர்
விண்ணிடைத்தணருட்பெருஞ்சுடர்மேவியாடல்விளைத்திடு
மண்ணறெய்விகவாலயந்தொழுதன்பினுட்புகலுற்றனர். 31

வாசநாறியகற்பகத்தொடரோடுவானவர்வேய்முடிக்
காசினங்கள்கழன்றுதிர்ந்துகழற்புறத்தடிதட்புற
மாசனங்கண்மிடைந்தகோபுரவாயிலெய்திவணங்கியுள்
ளாசைமுன்செலவெய்தினார்பசுவந்தியிற்பெறுகன்றென. 32

செம்பொனீடியவம்பலத்தர்சிலம்பொலிக்குழலஞ்செவி
வெம்புலிப்பதவண்ணல்பில்குவிடத்தவாயரவுந்தொழ
வும்பராதியர்மாலயன்வினையோடவாடலுவந்திடுந்
தம்பிரானருளாடல்கண்டுதழைந்தசிந்தையராயினார். 33

வேறு

கண்டவிழிகடமைக்காணூர்கட்புனலுட்
கொண்டார்முடியிற்குவிகையினராகி
மண்டாமுரத்திற்படியமகிழ்ந்திறைஞ்சி
விண்டாவுவகையெழவாய்விளம்புற்றார். 34

நீராடக்கங்கைநிலவாடவெண்டலையு
நேராடக்கொன்றைநெடுந்தாரசைந்தாடப்
பாராடவண்டம்பலவாடவன்பருள
நாராடவிங்ஙனடமாடுநன்மணியே. 35

வானாடரோடுவயங்குமரிபிரம
றானாடவுள்ளுள்ளுயிராடப்பங்கிலுறை
மானாடும்வேற்கண்மயில்காணவம்பலத்திற்
றானாடுமுண்மையறியேந்தமியேமே. 36

உருவாகியொன்றாயுரையொடுணர்விறந்த
வருவாகியன்றாயலகில்பலவடிவின்
விரிவாகியார்க்கும்விளம்பமுறைமுறையே
மருவாதுநின்றுமருவும்பெருவாழ்வே. 37

பொன்செய்கலனேயப்பொன்னினுமேம்படவிழைவா
ரென்னவுயிர்களுணர்வினியற்கேற்ப
வன்னவுருவம்பலவாய்வயங்கியெமர்
முன்னின்றருளிற்கலக்குமுதற்பொருளே. 38

ஆடும்பதுமையதுவாயமைப்போனாய்த்
தேடியதுகாண்பிறனாய்த்தெரிபயனாய்க்
கூடியனைத்தும்பிரிந்துங்குலவுவிளை
யாடனயந்துவிளைக்குமருளரசே. 39

மன்றைந்தொழிலுமகிழ்வினியற்றிடுவா
னென்றுதுடியுமுபயகரதலமு
நின்றபதமுநிமிர்குஞ்சிதத்தாளு
மின்றிங்கெளிதினெதிர்ந்ததெவன்கொலென. 40

போதமணக்கும்புலியூர்ப்பொலன்மன்றுள்
வேதமணக்கும்வியனூபுரமலர்ந்த
பாதமணக்குமனத்தாற்பணிந்திறைஞ்சிச்
சீதமணக்கும்பொழிற்சேவைச்செல்வரெலாம். 41

பொற்றாமரையிற்புனிதன்மனத்துதித்த
நற்றாமரைப்போர்முனிவனயந்துரைத்த
சொற்றாமியற்றும்விருப்பிற்றெழுதரிகி
னுற்றாரகோரமுகத்தினுறுதிசையின். 42

தாவாதகங்கைத்தடநீர்ப்படிந்தாடி
நீவாதநீறுநிலவவுடல்வயக்கி
மேவாவிழியின்மணியுமிசையணிந்து
நாவாரவைந்துநவின்றுநயந்துருகி. 43

உள்ளத்திருக்கோயிலூடேயுடையானை
மெள்ளத்தவிராதிருத்திமிகுமின்பங்
கொள்ளத்தணியாதெழுந்தகுறிப்பிதெனத்
தள்ளப்புனல்கண்டவிராநிலையினராய். 44

உற்றகரணமொருநான்கொருவழியாய்ப்
பெற்றமுயர்த்தபெருமான்றிருவடிகள்
பற்றுமுணர்வேயலதுபகுக்கிலராய்
மற்றுமொருதிங்கள்வதிந்தார்களந்நிலையே. 45

தென்பாலொளிருமுகத்திற்சிவம்பேணி
யன்பாற்கருதியரியதவமுயல்வோ
ரின்பாயமன்றலியையவருள்செயவே
முன்பாலிறைவன்முதிர்ந்தகருணையொடும். 46

முன்றாழ்சிகையுமுயங்கும்புரிநூல்சேர்
கொன்றாழுரனுங்குளிர்கண்மணிவடஞ்சேர்
பொன்றாழ்களனும்பொலியுமணியாழி
மென்றாமரைக்கைவிளங்குவியனாலும். 47

பொய்யிறிருநீறணிந்துபொலிநுதலுந்
துய்யவருணத்துகில்சூழ்ந்தொளிரரையுஞ்
செய்யமரைப்பாதுகத்திற்செறிகழலு
மையர்பிரமசரியமதுதோன்ற. 48

மாறிலாச்சைவமறையோன்வடிவெய்தி
யாறுலாஞ்சென்னியமலனெதிர்ந்திடலுங்
கூறுவாயின்சொற்குழறவடிவீழ்ந்து
யீறிலாவன்பினெழுந்தவ்வெழிற்குமரர். 49

எந்தாயடியேற்கிரங்கியெமதெதிரின்
வந்தாயரிமுன்வருதற்கரிதாய
செந்தாமரையோயலினார்திருவுளத்து
நந்தாவொளியேநகைப்பொற்பொதுவரசே. 50

ஞான்றுபுவிக்குருகிவெளிவானாய்
நின்றுமவையுணிறைந்தவுயிரானாய்
என்றென்றலவாம்பலவுமிசைத்தேத்தி
வொன்றன்புருக்குமுளத்தினிறைந்தினரால். 51

அஞ்சலடியேற்கருளென்றடிவீழ்ந்த
குஞ்சரனையாதியனையர்குறிப்புணர்ந்து
யெஞ்சலறுநந்தவத்திற்கிவணுறுவந்தே
மஞ்சர்புமதுமனத்துவிழைவெதுகொல். 52

இன்னேதருதுமிசைப்பிரெனவருளுந்
தன்னேர்தலைவனடிகடலைக்கணிந்து
பொன்னேர்சடையெம்புனிதநினையெதிர்ந்தே
மென்னேயிதனிற்பெறும்பேறெளியேற்கே. 53

தோற்றமுலகிற்றுடைத்தோந்துடைத்தோமென்
றூற்றமுறவேயுளத்திலுனையெதிர்ந்தோ
மேற்றகணத்தேயெனினுமெமையளித்த
தேற்றமுனிசொற்றிறம்பவயிர்க்குதுமால். 54

ஈண்டவ்வதுவையினிதுபெறவருளல்
வேண்டியடைந்தோமெனவேவிளம்புதலு
மாண்டபுனிதனளித்தேனடைதிரென
மூண்டபுலிக்கான்முனியைநினைந்தனனால். 55

வழுவைமுகத்தோன்றனைப்பயந்தவள்ளல்மனத்
தழுவையுறுதாள்முனிவேந்தையுன்னுதலுந்
தழுவியரையிற்றயங்குமுரியுடையு
மெழுமெவ்வுயிர்க்குமிரங்குமிதயமொடும். 56

குண்டிகையுஞ்செய்கைகுறிக்குமெழிற்கோலும்
புண்டரத்தினீறும்பொலிந்தவிழிமணியின்
கண்டிகையுங்கற்றைச்சடையுங்கலைவேத
மூண்டமிழுநாவுமொளிர்ந்தசிறப்பினொடும், 57

வேறு

முன்னவன்கருதுமளவையினுணர்ந்தம்முனிவரனிமைப்பினி லடைந்து, பொன்னடியிறைஞ்சிப்புரிதொழிலதனைத்திருவுளம்பு ரிதியென்றேத்த, வின்னநங்குமரரிருபதினைல்வரீடிலாவாழ்க்கையர் தவத்தர், பன்னகத்தரவிற்கேள்வியருலகம்பயன்பெறத்தோன்றின ரருளின். 58

காய்வயற்றுதியாத்தன்மையரிவர்தந்தகையெலாமுணர்தியா லுளத்திற், றாய்தவரினதுமனத்தினிற்பயந்து தொகையினுமிங்கிவ ர்க்கியைந்த, வாய்குழற்றிலதச்சிறுநுதற்பெருங்கண்ணன்னமென் னடையினார்தம்மை, யெய்கனற்கரியாய்விண்ணவருப்பவினிதினி லளித்தியாலென்றான். 59

வேதியவடிவின்விளங்கியவிமலன்விளம்பியமாற்றமுங்குமர ராதியுமதித்தங்கடிமிசைவணங்கியையநின்றிருவுளமிதுவே னீதியென்னிமித்தமென்பிறவடியேனெடுந்தவம்பல்பகலாற்று மூதியமிதுவேயுஞற்றுவல்கடிதினென்றனனுறுதவனிப்பால். 60

வெற்பினங்கானிற்கழிதரவிங்கும்விறற்புயக்குமரர்கள்பின்னுந் தற்பரற்றொழுதுதலைவவென்னாளுந்தாங்குமிவ்வுருவொடுந்தாள்சே ரற்பினர்க்கருளல்வேண்டுமென்றிரப்பவன்னதேயுரிதுமென்றருளி முற்கரந்திடலுமுனிவரன்றொழுதுமுன்னினனிங்கிவரோடும். 61

வேறு

தொல்லிருக்கையோர்துணைப்
புல்லிருக்கும்பொற்பதன்
மல்லிருக்குமைந்தரோ
டில்லிருக்கையெய்தினான். 62

சிந்தையிற்றெரிந்திட
வந்துவானுறும்பசு
வெந்தையென்விழைந்ததை
முந்தவோதுகென்றதே. 63

எய்தியானிறைஞ்சலு
மைதவிர்ந்தமாதவன்
னெய்தினேநுவன்றிடுஞ்
செய்தியொன்றுதேர்தியால். 64

மன்னுமென்றன்மான்தந்
தன்னில்வந்தசால்புடை
நன்னலங்கொளாலறு
பொன்னிகர்த்தபூவைமார். 65

துன்னிவண்டரற்றிடு
மன்னுமாமலர்க்குழற்
கன்னிமார்கவின்புய
மின்னவீரரெய்தவே. 66

தேருநல்லகோரசி
வாரியன்றனாணையா
னாரியர்க்குநன்மணஞ்
சீரினின்றுசெய்குவன். 67

ஆதலாலருங்கடிக்
கோதுயாவுமொல்லையி
னீதரற்குநேர்திடா
வீதுசெய்தியென்றனன். 68

அன்னதேவியற்றெனப்
யொன்னினாடரான்முனி
தன்னடிப்பணிந்தெலா
மன்னொடிக்கமைத்ததே. 69

வேறு

கண்டாய்தவனெஞ்சுகளித்தனன்காதன்மிக்குத்
தூண்டாமதிவாணுதலாரொடுந்தூயனாகித்
தண்டாவனல்மாதவர்வானவர்சான்றதாக
உண்டாயமணத்தொகையாற்றினிலோதியன்பின். 70

அம்மற்புயமைந்தர்தமம்புயவங்கைதன்னிற்
செம்மைத்துணையாகியபன்னிசெறிந்துவாச
மெய்ம்மைப்புனல்பெய்துவழங்கவிருப்பினோற்றங்
கம்மிப்பதமிட்டவருந்ததிகாட்டியன்னோர். 71

தேனார்மலர்மாலைதெரிந்துபுனைந்துசெவ்வி
மானார்தமதங்கைமகிழ்ந்தனர்பற்றிநூலி
னானவிதியின்படியாவுமியற்றியங்கண்
வானோர்மறையோர்தருமாசிவழங்கலேற்றார். 72

நாலுண்டநுணங்கிடைமென்றளிர்நூபுரத்தாட்
சேலுண்டவிழிச்சியரின்னலத்தேன்விழைந்து
மாலுண்டமனத்தொடுமற்றவர்தோள்மணந்து
நாலுண்டவிரண்டுபதின்மர்சின்னாளுறைந்து 73

பொன்னாற்றிடுதாமரையின்பெயர்ப்புங்கவன்றன்
முன்னாற்றிடுமன்புமனத்திடைமூளவன்பர்
கொன்னாற்றிடுவன்புலித்தாளவன்மாடுகூறி
யன்னற்றவனல்குமருண்விடையோடுமென்னோன். 74

வாயாசிகளோடும்வழங்கியவாளமர்க்கண்
மாயாதவிறற்படைமன்னவர்மாண்பினோடுந்
தேயாதபெருந்திருவின்னனசெய்தவத்திற்
சேயாயினர்கொண்டுநற்சேயிழைமாதரோடும். 75

செம்பொற்சடையொண்புலிபின்பதச்செய்தவன்ற
ளம்பொற்குழையார்பெறவன்பினளித்தவாடை
பைம்பொற்கலனாதிகளேவலர்பாங்கராயந்
தம்பிற்றுடரும்படியோகைதழைப்பவெய்தி 76

மதியம்புனையெந்தையைமாதுலனைப்பணிந்து
துதியம்பரநாடர்தொடங்கரிதாயதில்லைப்
பதியங்கணகன்றுகடந்துதண்பாய்கெடில
நதியந்தனைநண்ணினராதவன்வேலைநண்ண 77

எந்தைக்கடியார்தமையின்னலிழைத்துமுன்றன்
மைந்தற்குறுமின்னலையுள்ளமதித்துளான்போல்
வந்துற்றவர்நோமெனவஞ்சிவயங்குமென்றாழ்
முந்துற்றிடுவெம்மையகன்றுவர்மூழ்கினால் 78

ஒருகாவிரிகங்கையெனப்புகழோதிரண்டு
மிருபாற்றிசைமேவவிடைக்கணிருந்தசீர்த்தித்
திருவாணியிவர்க்கிடைமாமலைச்செல்வியொக்கும்
வருமாகெடிலப்பெயர்மாநதிவண்ணமாதோ 79

கற்பார்மடவன்னமனார்கள்கவின்மணஞ்சேர்
பொற்பார்சிவமைந்தர்கள்போந்தனரென்றெதிர்ந்துள்
ளற்பாலொளிரும்புளினப்பெயராதனந்தந்
திற்பாலவரொப்பநயந்தெதிரேற்றதன்றே 80

வாசப்புனலாடினர்மெய்யின்வருத்தமாறப்
பூசற்களியின்னிசைமாந்திபொலஞ்செவிக்கண்
ணாசைக்கினியாரொடுமந்தியின்செய்கைமுற்றி
மாசுற்றமமைத்தபடங்களைமன்னினாரால் 81

கங்குற்பெயராகியநங்கைதனைக்கலப்பத்
திங்கட்டலைவன்வரச்செவ்வணிதாங்கியெய்து
மங்குற்பெயரோர்மகளென்னவயங்கிவான
மங்கட்பொலிவுற்றெழலுற்றதுசெக்கரம்மா 82

சேவைப்பதியிற்பெருமானருள்சிந்தைதன்னின்
மேவப்படியாதவர்தம்முளமென்னமேல்கீழ்
பூவிற்படியெங்குமிடங்கொடுபோர்த்துநின்ற
தேவப்படுநஞ்சினெழுந்தவிருட்குழம்பே 83

வேடம்புனையோர்மகனெய்தவிரும்பவைக்கண்
ணாடுந்தொழிலோரிடுமைத்திரையன்னதன்மை
மூடுந்திணிவல்லிருளின்படமூட்டறுத்து
நீடுங்கடலார்ப்பவெழுந்ததுவெண்ணிலாவே 84

வெள்ளிக்கதிர்வீழெனவிண்ணவர்கொண்டவேலை
உள்ளாரமுதத்தினெழுக்கெனவொண்சகோரம்
விள்ளற்கருமன்றில்கள்வாகம்விழைந்துபொங்க
வள்ளூற்றிடலாய்நிலவெங்குமவிழ்ந்தமாதோ. 85

ஆறும்மதியும்புனைவோனிறையன்றியின்மை
தேறும்மதியாளர்கடமைசிதைவதேய்ப்ப
வீறும்மதியெய்தலும்வல்லிருள்வீந்ததன்னோர்க்
கூறும்புகழ்போலநிலாவொளிர்வுற்றதன்றே 86

காலங்கடவுட்பிறவொன்றெனினுங்கடற்சூழ்
ஞாலந்தனிலவ்வவர்பால்வழிநன்மைதீமை
சாலும்முறைபோன்றுகுவிந்தசரோருகங்க
ணீலங்குமுதாதியலர்ந்துநெகிழ்ந்தமாதோ 87

சேணிற்பிரிவுற்றுயிரன்பனைச்செவ்விகுன்றி
மாணற்றுயிர்வாடியகற்புடைமங்கைதன்பால்
வீணுற்றிடுபுல்லர்விழைந்தெனமேவிவண்டு
யேணற்றிதழ்மூடியவம்புயநாடியெய்தல். 88

சற்பிற்குரியாள்மனமூடியகாலையன்ப
னற்பிற்படுமால்புரிமெய்விலையன்னலாரின்
விற்பங்கயம்வாடலுமெல்லளிவீழநீலம்
பொற்பிற்குமுதாதியலர்ந்துபொலிந்தவம்மா. 89

வேறு

உறுகாவலன்பினர்கள் பிரிவாலயர்ந்துருகியுயிரூசலாடியுறைவுறுநீள், பெறுகாவதங்கமழுமலர்வாசவோதியெழில்பிணைமானனார்கள்குழுவினையே, குறுகாவலிந்துகொளுநினைவாலெதிர்ந்துகுறியதுநாடியிந்துவெனுமொருபேர், தெறுகானவேடனெறிவலைபோலகன்புடவிசெறிவானதெங்குநிலவொளியே. 90

உள்ளந்தெளிந்தவர்கள்கள்ளம் பொதிந்துபிறரெள்ளுஞ் சிலர்க்குமுலகினிலே, வள்ளன்மையாலறிவுகொள்ளும்படிக்குமருள்விள்ளும்வகைக்குநிகர்பெறவே, பள்ளங்கரும்புதர்களள்ளுமிருட்கடமதுள்ளும்புகுந்துபரிவதனாற், றெள்ளும்பனிக்கிரணவெள்ளம்பெருக்கியிருள்தள்ளுஞ்செயற்கணுறுதிறமே. 91

இத்தன்மையாமிரவிலத்தம்புயங்கவளை மத்தம்புனைந்த சடைமுடியார், நித்தன்றனக்குரியமெய்த்தன்மையன்பினர்கள்சித்தந்தவத்தினிடைநெகிழாச், சுத்தன்றருங்கரியமைத்தங்குகட்டுகிரின்முத்தஞ்சுடர்ந்தநகையினரோ, டொத்தங்கடைந்தபரிசுற்றந்தமோடுதுயில்வுற்றங்குறைந்தனர்களொருபால். 92

நூலார்மலர்க்கணெழுமேலோனயற்படருமாலோமிகப்பெரியர்நுவல்கீழ்ப், பாலாவுணர்ந்திடுமுனாலேயிவண்கடிதின்வாவாவெனப்பகருமொழிபோற், காலாயுதங்கள்பலகூகூவெனுங்குரலினாலேயுணர்ந்துதுயில்களையா, நாலாரிரண்டுதசமானாரெழுந்துதுடரேனோரினோடுநெறிநணினார். 93

பிரிவுற்றிடுங்கொழுநன்வரலுற்றதும்பிடிமென்னடைபெற்றநன்மகளிர்களிமேற், றெரிவுற்றிடுங்கிரணமுகமொத்தருங்கமலம்விரிவுற்றலர்ந்துசெறியிதழ்தேன், சொரிவுற்றிடுங்குமுதமலருற்பலஞ்சுரிவமனமுட்பொறார்களெனவலையார், திரையிற்சிலம்புவனபலபுட்குலங்களுறைசெறிவுற்றெழும்புலரியதுவே. 94

சிறையோதிமத்திவருமறையோன்வழிக்குமரர்செறிநீளிருட்படலமறவே, யெறிவாளொளிக்கடவுளெழுமாவியற்றிகிரியதனோடெழக்குணகிரியினே, பிறையூடிருத்துமுடியிறைகார்முகத்தினதுபெயரேயிசைத்தலுறுநதிவாய், நிறைமாமணித்திரைகடிரைவார்கரத்தினெறிவுறுமாதுறைக்கணுகிநெறியால். 95

விண்ணிற்சிறந்தவருநண்ணிப்படிந்திடுவதெண்ணிற்பவத்தருவின்வினையோர், மண்ணிப்பறித்தல்செயுமண்ணற்சடைப்புனலுமண்ணிற்பயில்வருடமோர்கால், பண்ணிற்கலந்திதனில்மன்னிப்பிரிந்திடுவதென்னப்பகர்ந்தபுகழ்பெறுசீர்ப், பெண்ணைத்திருத்தமதுதன்னிற்படிந்துவினைபண்ணிப்பெயர்ந்தனர்கள்வடபால். 96

காவிற்படர்ந்தநெறிமேவிக்கடந்தெறுழியாறுற்றடைந்துகவினுறுசீர்ச்,சேவைத்தலத்தினமர்காவிக்களத்தர்கழல்சேவித்துநெஞ்சமுருகினராய், நாவிற்பழக்கமறைதேர்விற்பனக்கமலமாநற்றவத்தளிருநகுதாள், மாவிற்றிருக்கவினும்மாதர்க்குலங்களொடுதூவிப்பணிந்தனர்கள்மலரால். 97

வேறு

திருவினொடும்போந்துகழல்சென்னியுறப்பணியுந்தெய்விகநற்குமரர்தமைத்திருவிழியானோக்கிக், கருணையொடுமறைமொழியாலாசிபலவழங்கிக்காமருபொன்மன்றநகர்க்கண்ணினையா ரெய்துஞ், சரிதமெலாமற்றவராற்சாற்றவுணர்ந்துருகித்தவழ்மதியமுடிப்பெருமான்றனதருளைப்போற்றி, வரிவிழியார்தங்களொடும்வான்கமலையெய்திவாழ்குதிரென்றருளிவிடைவழங்கினனங்கப்பால். 98

வேறு

சீராருமலர்முனிவன்செப்பியவம்மொழிகேட்டுத்திரடோள்வென்றித், தாராருமெழிற்குமரர்தவளநகைமணிமுறுவற்றடமென்கொங்கைக், காராருங்குழலியரோடகன்புரிசைக்கடிமாடக்கமலையெய்தி, யாராதபெருவிருப்பினுடங்குதித்தவணங்கினொடுமளவளாவி. 99

புலிபுகிர்த்தாட்டவப்பெருமான்புகன்றவரப்பெருமையினற்பொருவினன்கு, வலியதிறற்படைபெருகிவளர்ந்தோங்கிநாணுளும்வயமாவேந்தர், பலரடிக்கட்டொழுதியற்றும்பணிகேட்பத்தகும்விறலாற்பகையொன்றின்றி, மலியுயிரிற்கருணையினல்வானுலகும்வியந்துவப்பவழுவிலாராய். 100

மறக்கிலராவெழுதரியபெருமறைகளனைத்தினையுமகிழ்வானுள்ளந், துறக்கிலராய்மனுநெறியின்றுறையனைத்தும்விடுகிலராய்த்தொன்மையாற்றை, வெறுக்கிலராய்ச்செழுங்கருணைப்பெருந்திறத்தினெவ்வுயிர்க்கும்விருப்பாய்நிற்கு, மறக்கலனேயிவர்களெனத்தண்ணளியினரசுரிமையமர்ந்துமண்ணில். 101

நிங்கில்தாய்மும்மழையுநிலஞ்சொரியப்பல்லுயிரும்வறியநீர்மை, தாங்கிலதாயினிதுவப்பத்தாழ்தகையமறங்கொடுமைதகவிலாமை, யோங்கிலதாயகன்றொழியவுட்சமயத்தொகுதியெலாமுயர்வுவாய்ப்பப், பாங்கிலதாய்ப்புறச்சமயப்பதர்களெலாம்பல்திசையும்பதறியோட. 102

மண்ணெழுந்தவன்மீகத்துள்ளொளிரும்வானவனைமறவாராகி விண்ணைநிகர்கமலைதனிலிருந்தளித்தாரெனச்சூதன்விளம்பக்கேட்டு நண்ணரியவருந்தவத்தோருளங்களித்துமடக்கொடிபானடந்த யாவுந், தண்ணளியாலியம்புகெனப்போற்றுதலுஞ்சூதனெதிர்சாற்றலுற்றான். 103

மணம்பெறுபடலம் முற்றிற்று.

---

## தவப்படலம்.

உட்புலமைந்தினோடுமொழுகுதலறியாநெஞ்சத்
திட்பமதுடையீர்கஞ்சத்திருமகள்முதலோர்போற்றக்
கட்புலங்கவருங்கன்னிமாடமேற்கமலைதன்னில்
பெட்பினையொருவர்க்காக்கும்பெய்வளைமாண்புசொல்வாம். 1

பானலம்விழிகள்காட்டப்பவளமததரங்காட்டக்
கானலங்குழல்கள்காட்டக்கவினுதல்மதியங்காட்டத்
தேனலமொழிகள்காட்டத்திகழ்களம்புரிகள்காட்ட
மானிலங்காட்டவந்தமலைமுனமீன்றமங்கை. 2

முன்னவன்வகுத்தவாறம்முட்டிகன்வனவிச்சேத
னென்னவீண்டிசைக்கும்பின்னோரெறழ்வலிப்புயத்தரெய்தித்
தன்னெடுவாயில்காப்பத்தனியுழியிருந்துதிங்கட்
சென்னியனணையநோற்குஞ்செயற்குறுங்கோலம்வேய்ந்தாள். 3

கொண்டலைவளியிற்றாக்கிக்கூரிருள்கதிரினீக்கித்
தண்டலைமுடிமேற்போக்கிச்சைவலம்புனற்குளாக்கித்
துண்டவெண்மதியநெற்றிதுடர்தருங்கரியகோளி
னுண்டமைக்கரியகூந்தலொளிர்தரச்சடையதாக்கி. 4

காசினங்குயிற்றுஞ்செம்பொனிலம்பகங்கவினயாத்து
வாசநற்புனலிற்கூட்டும்வளர்மணித்திலதந்தீட்டுந்
தேசுடைநுதலிற்கிந்துஞ்சிறிதிணைபொருந்திற்றென்ன
மாசறும்புனிதநீறுவாணுதல்வயக்குவித்து. 5

தண்மணிக்காந்தள்வீயத்தளிரவைமுதிரத்தாழர்
வண்மணிக்கடகங்கிள்ளைவளைதொடிசெறிந்தகையி
லுண்மணிக்களத்தர்கண்ணிலுறுமணித்துடரையெந்தை
கண்மணியனையநங்கையினமெனக்கருதக்கொண்டு. 6

விட்டறவிழையுமின்னுங்கரந்திடவிளக்கமின்றிப்
பட்டொடுமணிக்கலாபமேகலைபயின்றுமெல்கி
யிட்டிடையினைதலஞ்சியிரங்கியவியல்பிற்றிங்கள்
வட்டவாண்முகத்துப்பேதைவற்கலையாடைபேற்று. 7

வெண்டளவலர்கொள்கூரல்விளைத்தெழிலமுதமூறிப்
பண்டருங்கிளவியாம்பற்பகல்வரவுணக்குஞ்செவ்வாய்
முண்டகமுனிவன்றன்பால்முறைமறைவிதியினோர்ந்தக்
குண்டலிமனுக்களோதிக்குழகனைநோற்கலுற்றாள். 8

நெய்யளாம்வாளும்வேலுநிறையுறைப்புகுதச்சேற்றுட்
செய்யளாங்கயல்கணீலஞ்சிதைவுறப்புரண்டுசேந்து
மையளாம்விழிகணுசிமறிமுனைதடவிநோக்க
மெய்யளாயனைத்துமாகிமேற்படுமமலைநின்றாள். 9

தவத்திளங்குருத்திதென்னத்தருமத்தின்வேரிதென்னப்
பவத்துளமழுந்தார்நெஞ்சுட்படர்ந்தெழுங்கொடியிதென்னச்
சுவற்றினிலியற்றுந்தீபஞ்சுடரொடும்பொலிவதென்னச்
சிவத்துளம்பதித்துவேறுசெயலறவிருந்தாள்மன்னோ. 10

கொழுநனையன்றித்தெய்வங்குளிர்நகைமடவார்க்கில்லென்
விழுமநல்லுரையைத்தானேவிளக்குதற்கமைந்ததொக்குந்
தொழுமனையாகியார்க்குமெவைக்குமாந்துரையைதன்னிற்
றழுவியபாதிமேனித்தலைவனைநோற்குஞ்சால்பே. 11

இன்னணம்வருடமோரைந்தேகுழியிமையப்பாவை
பொன்னவிர்சடிலப்புத்தேள்போந்தருள்புரிகிலாமை
யுன்னியவ்விறைவனுள்ளமுருக்குதற்கினியதாகு
மன்னியசாமகீதமென்பதுமனத்துட்கொண்டாள். 12

தவநிலையகன்றுமஞ்சிற்றூழ்குழற்குமரிமுன்னோ
ரிவனலனுவனுமல்லனெவனெனவுணர்கிலாத
வவனுளங்கனியும்வண்ணமகத்திடைக்கருதித்தண்ணந்
திவவுடைப்புரிகொணற்றீந்தெய்வதப்புனிதச்சீர்யாழ் 13

தாழியவங்கைதாங்கியிசையெழத்தாரம்வீக்கி
வீழிளநகிலிற்சேர்த்திவிரன்முறைதெறித்துச்செவ்வி
யேழிசையமுதகீதவின்னறவொழுக்கிப்பண்ணின்
வாழியமிடறுமொன்றிவழுவறவோசைமூன்றும். 14

ஓங்கலைக்குழையவாங்குமும்பர்கடலைவனுள்ளம்
வாங்குறவாங்கித்தாழ்ந்துவளர்பிருகுடியுமேரு
வாங்கயல்விழியுஞ்செய்யவாம்பல்வாய்தானுங்கோடா
வீங்கொளிநகையுந்தோன்றவியப்பினிலிசைத்தாளம்மா. 15

வலத்தினிற்கனகவெற்பைவளைத்தவன்றன்னைக்கூடி
நலத்தையேமனத்துவேண்டிநங்கையிங்கிசைத்தகீதம்
புலத்துளமாந்தர்க்கெல்லாம்செவிவழிபுகுந்தபோதில்
நிலத்துளவசரமொத்தார்நெக்குளமுருகியன்பால். 16

புள்ளொடுவிலங்குந்தத்தம்புரிதொழிலறியாதாகி
புள்ளுணர்வுருகிநிற்பவொளிர்தருக்குலங்களியாவுங்
கள்ளிழிமலரும்பூவாக்கவின்றளிருயிராதென்னி
லெல்லாருமுவமைவேறென்றிசைப்பதுமிழுக்கேயன்றே. 17

செஞ்சுவைமகரயாழிற்றேரிருமுனிவர்பாடு
மெஞ்சலிலிசைத்தேனோடுமெழில்வளரெகினப்புத்தே
டஞ்சொலுங்கசப்பவையன்றாழ்குழைச்செவியினூடே
வஞ்சிதன்னமுதகீதம்வளம்பெறப்புகட்டினாளே. 18

சுருதியினுறுதியாயசுந்தரிதனையேபாடுஞ்
சுருதியைத்தனின்வேறில்லாச்சுடருளங்கனியத்தன்னில்
விரிதருமுலகுமின்பம்வீங்கிடவேறுநின்று
கருதிப்பாங்கிசைப்பவன்பிற்கழிந்தனவருளிற்சின்னாள். 19

வேறு.

விலக்கருந்திறற்குஞ்சரவேந்தனேயாதி
சிலைக்கைமைந்தர்கள்சேயரிமதர்விழித்தெய்வக்
குலக்கவின்கொடியிறைவனுரெண்புயங்கூடி
மிலக்கெவன்கொலோமுற்றுறுமெளிதினென்றினைந்தும். 20

பிள்ளைவெண்மதிமிலைச்சியவொருவனைப்பிரியாக்
கிள்ளைமென்மொழியேகொலென்றுன்னலாற்கிளர்ந்து
தள்ளரும்பெருங்களிப்பொடுந்தையலைத்தத்த
முள்ளமார்ந்தநல்லுயிரெனவோம்பினிருந்தார். 21

ஆற்றுநற்றவமுனிவனுமணங்கிவணிலேமை
நேற்றுநெஞ்சினனென்னினுந்தேமொழிதவத்தி
னாற்றமுமனத்துறுதியுமுணர்ந்துளமிரங்கி
யேற்றமர்ந்தவனருள்செயாதிருப்பனேயினியும்: 22

தாபசிந்தையாளுடற்பொறைவிழைவிலாடுணிந்து
தீயின்மூழ்குவள்பின்னரென்செய்தவம்யாதாம்
வீயுநல்லறந்தானுமென்னுள்ளசம்வெதும்பித்
தாயினல்லவளிருந்தனன்றவம்புரிசூழல்: 23

அன்பனருளங்கனிந்திடவணங்கிசைத்திடலாற்
றன்பமெவ்வுயிர்த்தொகைகளுமுணர்ந்திடாதாகி
யின்பமுற்றனவநங்கனுந்தனக்குறுமெலிமை
யென்பதென்றகன்றிடுமெனவெதிர்விழைந்திருந்தான். 24

தவப்படலம் முற்றிற்று.



# இரண்டாங்காண்டம்.

## வித்தியாதரப்படலம்.

### விநாயகர்துதி.

திருவுஞ்செல்வமுமோங்கிவளந்திகழுமிடபபுரிச்செல்வன்றா
ட்கீழ், மருவும்பல்லுயிர்க்கெல்லாம்விளைவாமும்மலம்போக்கிவழி
யோடார்வம், பெருகும்வீடடைவிக்கும்பெருமானென்றன்பரெலா
ம்பிரியாதேத்து, மொருகொம்புமிருசெவியுமும்மதமுமுடையானை
யுளத்தில்வைப்பாம். 1

### இடபபுரீசர்.

வில்லாருந்திருநுதலெம்மன்னையிடமிவ்வுலகம்வியக்குமாறு
நெல்லானதிருநாழியளித்தறமெண்ணான்கினையுநிலவச்செய்த
அல்லாருங்கண்டனெனமாமறையோடாகமமுமறிவின்மாண்ட
நல்லாரும்பணிந்தேத்துஞ்சேவைநகர்ப்பெருமானைநாடிவாழ்வாம்.

### மங்களநாயகி.

அங்கணுலகினில்வாழுமரிவையர்மாற்றவளென்னிலதுதாளாது
பொங்குபெருஞ்சினங்கொள்வதுலகவழக்காமதனைப்போற்றா தென்
றுங், கங்கையவள்சிரமிருப்பக்கணவனுடனூடாதுகலந்துவாழு,
மங்களநாயகியெனுமெம்பெருமாட்டியின்கமலமலர்த்தாள்போற்றி

### முருகக்கடவுள்.

அண்டர்களவுணர்துயர்பொருதலமந்தையகோவெனச்சரண
டையக், கண்டுதன்றாதைதிருவுளப்படியேகண்டகர்வலிபெலாந்து
லைத்துச், கொண்டல்கண்படுக்குங்குன்றுகடோறுமாடலேபுரியும
க்குமரன், புண்டரிகத்தாளிரண்டையுமூன்றுபோதினும்போற்றுத
ல்புரிவாம். 4

### நாமகள்.

காத்தாளுமாயோன்றன்மார்பகத்திலமர்ந்தருள்செங்கமலத்தா
ள்போல், மூத்தாளைப்பின்னிறுவித்தான்பிரியுமுறையாளாதுலக
மூன்றும், பூத்தாளுமொருபிரமனுவகத்திற்பொலிவாளைப்புலவோர்
பாவிற், கோத்தாளவினியதமிழ்கொடுப்பாடன்றிருத்தாளைக்குறித்
துவாழ்வாம். 5

## நால்வர்துதி.

அங்கமதைப்பூம்பாவையாக்கியகாழியர்கோனையமணர்சூளால்
வங்கமுழுங்கடலகத்திற்கற்பிணையாய்க்கொண்டவாகிசர்தன்னைப்
பைங்கதிர்நேரிழைப்பரவையூடலறப்பரமனைத்தூதாகப்பண்ணு
மங்களசுந்தரனையரன்மாணிக்கமெனுங்கோவைவழுத்தல்செய்வாம்

## அவையடக்கம்.

வானநின்றிழிமழையினைத்துணைக்கொடுவானைத்
தானடைந்திடநினைவுறுஞ்சழக்கனைநிகர்ப்ப
ஞானமிக்கவர்விழைகிலாமொழிபலநாடிக்
கூனலம்புலிச்சடையினேன்கதைசொலக்குறித்தேன். 7

மற்றும்யான்சிலபகர்வதென்வானிலாமின்னி
னுற்றசிற்றொளிதனைக்கொடுகூத்துகந்தாட
முற்றுநம்பியமூடனேயன்றிவேறுளதோ
கற்றுநற்றெளிவின்றியுங்கவிசொலக்கருதல். 8

ஆயினும்மெனதாசையாலறைகுவனதனிற்
றூயசொற்சுவைபொருட்சுவைதோன்றிடாதேனு
நாயகன்புகழிருப்பதாமெனவுளநாடித்
தாயினல்லவர்பொறுத்தெனக்களிப்பர்தண்ணளியே. 9

## நூல்

மும்மையுமுணரவல்லமுனிவரர்சூதனென்னுஞ்
செம்மைசேர்மனத்தினோன்றன்றிருவடிதொழுதுபோற்றிக்
கொம்மைவெம்முலைகளார்ந்தகுண்டலியெனும்பேர்கொண்ட்
வம்மைசெய்தவத்தின்பின்னராயதென்புகலுமென்றார். 1

கேட்டமாதவரைநோக்கிக்கிளர்மதிமுகத்தணுகி
வாட்டடங்கண்ணுளாங்குமாதவம்புரியுநாளில்
வேட்டநல்லிசையின்மிக்கவிஞ்சையருலகம்விட்டோர்
தோட்டலர்தார்கொள்விச்சாதரனுற்றசரிதைசொல்வாம். 2

மன்னியமறையோர்நான்குங்கற்றமாதவரேகேண்மின்
பொன்னகர்தனைவிட்டிந்தப்பூதலந்தன்னிலுற்றோன்
கன்னிவாழ்மாடமோங்குங்கமலமாபுரியைக்கண்டே
என்னகரிதற்கொப்பாமென்றெண்ணினனெழிலின்மிக்கான். 3

நறைகமழ்கூந்தற்செவ்வாய்மங்கையர்வாழ்மாடமேங்கப்
பொறைதருநிலமடந்தைசெய்தவஞ்ஞானத்திறலே
[illegible]
சிறையளிமுரலுந்தாரான்றிகைத்தனன்சிறிதுநேரம். 4

[illegible]த்தகையெனப்புவாய்ந்தவிளங்கொடிச்செங்கோனன்மித்
[illegible]த்துநீர்க்கடல்சூழ்வையத்தராதிபராகாரென்ன
மொத்தவுமுன்னிச்சென்றான்செல்லுங்கால்மேகநாதன்
வித்தகர்சூழநின்றவவைவளம்விளம்பக்கேண்மின். 5

வேறு

அத்திபாரமுந்தளமுநற்பளிங்கினலமைத்து
பத்தொடெட்டுநூறாயிரம்பருத்ததூணிறுவிச்
சித்திரித்தபோதிகையதன்மேற்புறந்திகழ
வைத்துவச்சிரவுத்திரமீதுறவகுத்தே. 6

இருபெருந்தொளிபிறங்கிடுமிந்திரநீலம்
புருடராகம்வைடூரியம்பொன்கொடுபொருத்தி
மருடரும்படிசுவர்த்தலமமைத்துமாமுகடக்
கருடனாருமாதவன்பதிகண்டிடக்குயிற்றி. 7

மண்டுபேரொளிகொண்டிடமயன்படைத்திட்ட
மண்டபத்தினிற்பூரணகும்பம்வைத்ததுவே
கொண்டல்வண்ணனேந்தாழியோகுளிர்தருமதியோ
அண்டம்யாவையும்விளக்கிடுமலரியோவறியோம். 8

எண்ணுதற்கரிதாயதோரெழில்கொள்மண்டபத்திற்
றண்ணிழற்புரிசத்திரமிந்துவிற்றயங்க
வண்ணமங்கையர்கவரிகளிரட்டுறமகிழ்ந்தே
விண்ணவர்க்கிறையரியணைமீதுவீற்றிருந்தான். 9

அரம்பைமேனகையூர்வசிதிலோத்தமையாதி
வரம்பிலாதபல்கணிகையர்மனத்திலுற்றதனைக்
கரந்தனவிருகண்களாற்காட்டியேநடித்தும்
புரந்தரன்புகழ்பாடியும்பொழுதுபோக்குவரே. 10

வேறு

காரிருந்தனையகூந்தற்கடிமணமியல்பின்வீசு
மாருயிரனையவிந்திராணியோடமர்ந்தென்னாளுஞ்
சீரியபோகந்துய்ப்பான்செப்பிடுபணியேகேட்ப
வேரியந்துணர்கொள்காவுந்தேனுவும்விளங்குமோர்பால். 11

ஆனசீர்யாவுமல்குமணிகொள்மண்டபத்திலான்ற
வானவர்க்கிறைவன்வைசமாசுரர்பூதரேர்கொ
டானவர்சித்தர்விச்சாதரரொடுசாரணரும்
ஞானமாரியக்கர்பைசாசர்நரர்நற்றாள்போற்ற. 12

அம்புலியிரவிசேயோடணிகொளும்புதன்வியாழன்
பம்புசீர்சௌரிசுக்கிரன்பதியிலாதகோள்கள்
வம்பலர்மாலைசூடுஞ்சமன்வருணன்தீயோடு
சம்புவின்றுணைவனானதனதனுஞ்சூழ்ந்துநிற்ப. 13

சுகன்சத்திபிருகுசுங்கன்தூயகாசிபன்வசிட்டன்
குகன்புகழகத்தியன்கோதமன்சனற்குமரன்கோதில்
மிகுந்தவத்துரோமபாதனத்திரிவினையிலோர்த
மகந்திகழ்ததிசிகோசிகன்னமர்மரீசியோடும். 14

பராசரன்பரத்துவாசன்குமுதாக்கன்பலரும்போற்றத்
தராதிபரெவர்க்குமேலாஞ்சனகனங்கனகன்சீர்சா
லராவணியமலற்போற்றுமன்னியனனையோரவ்வ
மராபதிக்கிறைவனோடம்மண்டபத்திருக்கலுற்றார். 15

இருந்தமாதவருக்கெல்லாமிணையிலாதனமளித்துப்
புரந்தரனிருப்பவாங்குபுகுந்தவன்புளகம்பொங்கக்
கரஞ்சிரமேற்குவித்தக்கமலமாபுரியினோடுந்
திருந்திழைதன்னைக்கண்டவாறெலாந்தெரிக்கலுற்றான். 16

எண்ணுதற்கரியஞாலமெழினோடேழ்புரப்போய்
மண்ணினுட்சீர்பெற்றோங்கும்வளநகரெவற்றினுக்குங்
கண்ணெனவிளங்கித்தோன்றுங்கமலமாபுரியென்றொன்றிவ்
விண்ணகர்தானுமொவ்வாமேன்மையிற்றிகழ்வதம்மா. 17

வேறு

பாருளோர்புறவிருட்பாற்றுஞாயிறு
சீருறுமதியுடுக்கணங்கள்சேண்செல
வாருமென்றழைத்தவைவிடாயைமாற்றிடு
மேருவேயெனமதில்வியனகர்க்குள. 18

அடர்ந்திடுமரைமலர்மாலினாழிபோற்
படர்ந்தொளிவிடுவதைப்பார்த்திடங்கர்கள்
சடம்பொழிசரிபுரற்கால்பிணித்திடாக்
கிடங்கரினீர்நிலைகிளைக்கவல்லதோ. 19

மாலுறைபதியொடுவேதன்வாழ்பதி
போலுமோவிப்பதிபொற்பின்மிக்கதே
மேலுறப்போயதைக்கண்டுமீண்டதா
நாலுகோபுரங்களுநனிவிளங்குமே. 20

நீங்கருவளமெலாம்பொலியுநீணகர்க்
கோங்கியகோபுரத்துச்சியிற்கொடி
வாங்கிருந்துயருளாழ்வறியர்தங்களைத்
தாங்கருமகிழ்வொடுஞ்சாரச்செய்யுமால். 21

இன்னவாருறுநகரெழில்கொள்வீதியின்
மன்னியவிரதம்வாரணங்கள்வாம்பரி
துன்னலினென்றுமேதுகளதாயிடப்
பொன்னினற்றகட்டினாற்புதுக்குவார்தினம். 22

முன்மனுவியபியமுறைபிறழ்ந்திடா
துன்னியேவாண்டிடவோங்குமின்னகர்
துன்னியவேதியர்மகஞ்செய்தூமமே
மன்னியமுகிலெனமயில்நடிக்குமால். 23

சொன்னயப்புலவர்களுவமைசொல்லிடும்
பன்னிருகரத்தனுமதனும்பார்த்தனு
மின்னவிர்வேலுடைவேந்தர்தம்முனம்
பொன்முனஞ்செம்பொளிபூத்தல்போல்வரால். 24

மணிநவம்பொன்னகிற்சாந்துமான்மதம்
பிணிமுகப்பீலிவெங்கரியின்பீடுடை
திணிமருப்பாதியசெறித்துவிற்றுவாழ்
வணிகர்வீதியினெழில்வகுக்கவல்லதோ. 25

பழுதிலாவந்தணர்மகம்பயிற்றிட
வழுவிலாதிறைவர்செங்கோல்வளர்த்திடச்
செழுமையார்வணிகர்வாணிபத்திற்சீர்பெற
உழுதுவாழ்பவரிலமோங்குமோர்புறம். 26

பொன்றிணிந்தோங்கியபொருவில்மாளிகை
யொன்றுபோல்யாவுமேவும்பரோங்கலிற்
றுன்றியவொளியினாற்றுறக்கம்பொன்னென
லன்றிவேறில்லெனச்சொலற்கமைந்தன. 27

பாடுவார்சிற்சிலர்பாடற்கொத்திட
வாடுவார்சிற்சிலராடல்கண்டபின்
கூடுவார்சிற்சிலர்கூடலின்றியு
மூடுவார்சிற்சிலர்காதலோங்கவே. 28

வேறு

தயங்குசெல்வநீடளகையோதமனியவுலகோ
வியன்கொள்நாகர்வாழ்பதிகொலோவெனவிழுமியதாய்
வயங்குமன்னகர்மாடமேல்வாணெடுங்கண்ணார்
நயங்கொளுங்குழற்கிடுபுகைமுகிலைநட்புறுமே. 29

நீர்வளத்தொடுநிலவளநிறைந்துநாடோறு
மேர்வளர்ந்திடுநலம்பலவியற்கையினுளதாய்ச்
சீர்வளர்ந்திடுநகர்க்கெலாஞ்செல்வமிக்கதுவாங்
கார்வளர்ந்திடுசோலைசூழ்கமலமாபுரியே. 30

மாமுகிற்படிமாளிகைதோறுமங்கலத்தா
மோமமேவிடவலம்புரியின்னிசையோங்குங்
கோமகாருறுவீதியிற்குணிலுறுமுரசம்
நாமவேலையதாமெனநாளுமோய்விலதால். 31

வானினாகியமீனினுமதிகம்வாரணங்கள்
கானினாமலர்க்கதிகமாகியதுகந்துகங்கள்
மானமேவியவீரரையளவிடமாளா
தானதாயினுமிரதமோர்வெள்ளமேயமையும். 32

வரையிலுள்ளனவளைகடலுள்ளனவாழுந்
தரையிலுள்ளனதழைந்திடுவனந்தனிலுள்ள
கரையிலாததோர்பொருளெலாங்கணக்கிடற்கரிதாய்
நிரைவதாகியநகரினுக்கிணைநகரிலையே. 33

வந்துமன்னவர்மன்னன்முன்மாமுடிமணிகள்
சிந்திடப்பணிந்தளப்பராலரசர்தந்திறையை
யெந்தநேரமுமிவ்வகையிருத்தலினோர்வை
குந்தமேயெனத்திகழ்வதுகொற்றவன்கோயில். 34

மடங்களோர்புறமமைவுறுமணியினாலமைவாந்
தடங்களோர்புறமமைவுறுந்தருமமேபுரியு
மிடங்களோர்புறமமைவுறும்வேள்விகளியற்றத்
துடங்குசாலையையெண்ணினாற்சொல்லுதற்கிலையே. 35

அலைமாட்குரித்தாயதோராலயமருங்
கலைமகட்குரித்தாயவெண்கமலமேபுரையு
நிலமகட்கொருநித்திலமேயெனநிலவி
யலகில்காலமுமழிவிலாவளத்ததன்னகரே. 36

கிள்ளையாகமவிதியெலாங்கிளத்திடக்கேட்டே
யுள்ளவாறுபோல்நாகணமுரைசொலத்தொடங்குந்
துள்ளுமைம்பொறியடக்கியதூயர்போற்புறவு
கள்ளமின்றியேதவஞ்செயுமுறைதனைக்காட்டும். 37

சாந்தமேவியேதவம்புரிமுனிவர்கடமக்கவ்
வேந்தனுள்ளமோராலயமாகவேவிளங்குங்
காந்தெரிக்குநேர்குலிசமேந்தியநெடுங்கையோய்
மாந்தர்தம்முளவ்வள்ளலோரிறைவனேயாவான். 38

வேறு

இவ்வாறுவளமருவுமெழினகர்த்திடைவேறொன்
றெவ்வாதவணமோங்கியுளதாமாளிகைகன்னிற்
றெவ்வானோரில்லாததிறல்வேந்தோடுதித்தாளை
யெவ்வாறுபுகழ்ந்தாலுமிணைகூறவொண்ணாதே. 39

வானோர்கள்புகழ்ந்தேத்துமகவேந்தேயம்மாது
தானோர்மங்கையர்வயறுதந்தாளென்றென்னுகிலேன்
மீனொருங்கடற்றோன்றிமேனாளிலுதித்தாள்போற்
கானொருங்குழலாளிக்காசினியிலுதித்தாளே. 40

என்றனைத்தனியிருத்தியிடில்லாவவைமேவுங்
குன்றாதமுனிவர்முதலெல்லோர்க்கும்விடைகூறி
மின்றனென்றிடுகுலிசன்விஞ்சையன்றன்முகநோக்கி
நன்றேயம்மாமாதினெழில்கூறென்றிடநவில்வான். 41

வேறு

குரையார்கடலுணுமுகிலானதுவெகுகுறைவாய்வெளிறதுத
னைமேவத், திரைவாயறலதுசிதைவாயொழிவுறசெழிவாமிதழியு
ம்வனமேவ, வரையாரிந்துவின்கனிவாய்தனிலுறவளமாமலரொ
டுபுழுகோடு, நிரைவாய்வதியும்வல்லிருளாமெனினதுகுழலோடி
ணைசொலநிகராமே. 42

வளமாகியதமனியமாமெனமிகவொளிவாவிளைநர்கடினம்வாட
உளதாயணிதிகழுவதாய்திலதமதுளதாகியுமனைவொருநாளு (ரே
மிளைபாவணமொடுகுடிலந்தனிலொருசிறுபோர்தனவினி லெழிலி
வளைவர்னதும்றைவிடமாகியதனுபெறுமாறெனினுநன்கராமே 43

செழுவான்முழுமதிகுடையாமெனவெகுதிறலான்மிகுமெழி
ன்மதவேளான், வழுவாவகைவிடுமலரேவுகளுறைசிலையானதுமி
கமனநாணிக்; குழைவாய்முடியதுகுனிவாய்மலரடிகொளுமாறுசா
தெனிற்குலிசத்தோய், விழைவாகியபிருகுடிதானதுவெவ்வில்மிகை
யாமலதொருபொருளாமோ. 44

மடமான்வனமதுதனின்மேவிடவளிமலரானிறைவுறுமடுமேவ
வடுமாலவணமொடுறவாகிடமரைமலரானதுவிதழ்விரிவாகப்
கடலானதுசிறைதனின்மேவிடநுதிக்சனையானதுமரமதைமேவ
விடமோடமுதளவியதாகியவிழிக்கிணையாகியபொருள்வேறின்றே.

மருவார்குழன்முகிலருகாய்மிளிரநன்மணிநேர்கருமைசம்பி
டமேவத், திருவார்குமுதமென்மினையாளுடனுறசெறிவாகியகலைமு;
றையாதே; விருநாண்மரைமலர்குவியாதமைவுறுமென்னின்வானவா
தமதிறையோனே, வெருமாமுகமொடுமதியானதுசிறிதிணையாமெ
னிலதையிசைவாமே. 46

விரையார்குமிழொடுமெளிதாகியமலரெளிதாயழிவுறுமெனி
ன்விண்ணோ, ரசேயணிதிகழ்மணிநாசியினெழிற்கமைவாயொ
ருபொருளுளதேயோ, உரையோடுறைகவுளறிவோர்மனமெனவுள
தாகியபூங்கொடிவள்ளை, தரைவாயழிவுறலிலையேயிருசெவியதனோ
டொருவழிசரியாமே. 47

நலமேவியமுகமதியானதிலுறுகனிவாய்நளினமென்மலர்நேரார்ச்
சொலவாகியுமதிலமைவாகியநகைதளவேர்முகையொடுசுடர்மேவி
நிலவேயுமிழ்தரளமதேயெனிலிவைதுளையோடலருறுநிலையாகி
விலையாய்விடுவதுமியல்பாயுந்தவின்மெலிவாகியபொருளிணை யா
(மோ. 48

மொழியாதெனின்மணமுளதாகியகனியொருமூன்றொடுகழை
தனைமேவி, யிழிவாமிரதமுமமுதாமெனிலிவையிழிவாகியகுணமு
ளதாகிக், கழிவாகியபொருளுளதாகியதெனிற்கடையேனினைசொ
லமுடிவாமோ, விழியாயிரமுடையிறைவாசிபுணர்விழலவயரா
கடிருநாதா. 49

சங்கத்தொடுகமுகெனலாகியகளந்தனிமாமுலைவெற்பிடைத் தோன்றி
அங்கொத்தொளிரமைதனைநேர்தோளிணையலவாமெனநற்கழைதன்
பங்கப்படவாலையிலாடுவர்வளைபதிவாகியதொருமுன்கையைத் (ளை
துங்கத்தமிழெனுமிசையார்வீணையைநிகராமெனுமொழிசிறிதாமே.

இப்பெற்றியிலமர்கரமோடமைவுறுமங்கையானதினிணைமேவ
அப்புற்றரியநற்றவமேபுரிகுவதருமாமரைமலரொருதாளிற் (ங்
செப்பற்கரியதொர்விரலானதுகெளிரதனொடெறிதிரைக்கடன்மேவு
துப்பைப்புகலுவரிவைதாமழிவுறல்சொல்லப்படுமோபுவிமீதே. 51

நண்ணப்படுமுகிர்பிறையோவெனினதுநாளுமோர்வழிநில்லாதா
லெண்ணற்கிலகிளிதுண்டத்திணையெனிலீடாயிடுமுறை சிறிதின்
றே, வண்ணச்சிமிழ்மலைமுடிமாமுகைகுமிழ்வளமாமிளநீரொடு சூ
தின், கிண்ணத்தொடுதாளந்தேர்சக்கரவாகப்புள்ளிவைகீழாக. 52

வட்டங்கொடுமெடியிட்டுப்புளகிதமாகிமணிமார்பிடைமேவி
சட்டுப்படுமொருமதயானையின்மத்தகமேயெனவாங்கவின்மேவி
பெட்டிட்டதெனப்பசலைப்பொலிவொடுபுனுகாதியணிந்தொருமார
னிட்டுக்கொளவைத்திட்டத்திருமுடியெனலாகியமாநகிலம்மா. 53

முலையாமலையினின்றிடைவீழழகெனுமொருகாலதிலுறுமற
லோமுன், னிலைமேலயர்வொடுதுயின்மாலெனவுதரமதாரழகியசி
றுரோமம், குலையாமலர்தருகொடிமாமதனுடல்வகிராமிழைகுரை
துடியோடுஞ், சொலவாகியவிடையுளதாமெனிலதுதுணையாம்விழி
யெதிர்தோன்றுவோ. 54

பொன்னேபொருவியவல்குற்கிணையொருபொருளோவுலகினி
ல்விதியின்றிக், கொன்னேயரசிலையரவைச்சுனையைக்கோடாதொ
ளிருந்தேர்த்தட்டைச், சொன்னாரவையோவுதிரும்மறையுஞ்சூழு
மிடமெல்லாமோடு, மன்னேநெல்லுக்கிணையாய்ப்புல்லேநேருமெ
ன்னுமரபாமே. 55

பூவாகியகணைகழையாகியதனுகொடுபோர்புரியுமொர்மதனெ
ன்னுங், கோவாழ்மனையின்முனிசைவாகியகதலியதோவொருகுன்
றிடைமேவு, மாவானதினெழிற்கரமோவெழிலுறுமணிமேகலையாம
ணிமேவித், தேவாவூருறுமெழிலானதையென்சிறுநாவிற்சொலிமு
டிவாமோ, 56

இளமாமயிலெனுமெழின்மேனியிலலவன்போலிலகியவிருசானும்
வளமேவியவொருசிறுகாகளமெனவடிவேயுடையகணைக்காலு
மளியானிறைவுறுகுழனரியர்வருடியதாலோவவனியின்மேவி
யுளிபோலலர்பலபடவேர்மரையெனவொளிர்வாகியபரிபுரபாதம்.

வேறு

இன்னவடனக்குநாதனீரெழுபுவனங்காக்கு
மன்னவனியலாதுமண்மிசைவாழ்வோனுயி
லென்னவாமையுண்கண்ணுளெழினலமெனமனத்து
முன்னமேநினைந்தேன்பேதைமணங்கொளமுயலுவாயே. 58

அவ்வுரைகேட்டநாதன்கேசரர்க்களவிலாத
செவ்வியவாடையாதிதிரவியம்பலவுநல்கி
நவ்வியையவேலைகூற்றைநஞ்சினைவென்றகண்ணங்
கொவ்வைவாய்மயிலையுள்ளக்குகையிடைச்சிறைவைத்தானல். 59

வாளெனநெடியகண்ணுள்வடிவெலாமனத்தேயுன்னி
நீளவுநினைந்தகாலைநெடுங்கழைகுனித்துமாரன்
வேளையுமிதுவேயென்றுவிட்டனன்மலரம்பெல்லாந்
தாளவுமாற்றானுற்றதன்மையைப்புகலப்போமோ. 60

விஞ்சையன்மொழியனைத்தையும்விருப்பொடுங்கேட்டு
நெஞ்சழிந்துயிருலைதாநீங்கருநாணு
மஞ்சியோடிடவயிரவாட்படையினனலிற்
பஞ்செனத்துயருற்றிடுசரிதையும்பகர்வாம். 61

வித்தியாதரப்படலம் முற்றிற்று.

---

## இந்திரப்படலம்.

மானேயுனதுவடிவையெலாம்விஞ்சைப்புதல்வன்வழுத்திட்வு
மூனேசுமந்தவுயிரோடுமொன்றாயினையாமானலுந்
தேனேபாகேயெனவாயசெவ்வாய்முத்தந்தாற்பின்
றனேயுய்வேனல்லாதுமாரன்கணையைச்சகிப்பேனே. 1

பாலைநிகராமொழிமாதேபருதிகுடபாற்றிசைமேவி
வேலைதனிலேபுகுவானேல்விள்ளற்கொண்ணுத்துயர்மேவ
மாலைவருமேயதன்பின்னேவளருமதியும்வருமேயான்
காலையளவுமெவ்வாறுகாமன்கணையைப்பொறுப்பேனே. 2

வேறு

வடிவுடைமழுவுமானும்வாழ்திருக்கரனையொன்றான்
முடிவுறுதவனைவேண்டிமுழுத்தவம்புரிவாடன்னைக்
கடிகமழ்தார்கொள்வேந்தன்கருதியதுணர்ந்துநெஞ்ச
மிடிவுறுமாறுநோய்செய்கணைபலவிரைத்தான்மாரன். 3

முன்னையூழ்வலியினாலோமேலுள்வினையினாலோ
மன்னியவுலகமெல்லாங்காத்தளித்தழிக்கவல்ல
அன்னையோர்கன்னியாகவருந்தவம்புரிந்துநிற்குந்
தன்மையையுணரான்காமநோய்கொண்டேகவிப்பான்சொல்வான். 4

வேறு

என்னக்கழியிருக்குங்காலத்திரவி
மன்னன்றுயரந்தனைக்காணமாட்டாமற்
பொன்னுற்றநேமியெழுமாபொலன்றேரோ
டின்னற்கரியகடல்வாயொளித்தானே 5

நிலநிறமேவிநெடுஞ்சோலைவாய்நின்று
சாலவருதென்றற்பாசந்தனைமேவிக்
கோலமாருசெக்கர்க்குழலானதுதிகழக்
காலனுமென்னக்கவின்றதெழின்மாலை. 6

வந்தேதபொலிகின்றமாலைதனைநோக்கி
வெந்தனுடலமெழில்வேட்கணையாலே
வெந்தேமடியும்விதியாயதின்னேர
மெந்தவிதமாய்நலிவாய்நீயென்றானே. 7

வாயாற்பலபன்னிவாடிமதிமாறி
நோயாற்றவிக்குநோக்காயிரத்தான்முன்
பாயாமலரோகடலோவெனவுள்ளப்
பேயானதுமருளவந்ததொருபேரிருளே. 8

அன்றிலலறவார்கலியுமேயலறத்
தென்றலுடற்புண்ணிற்சென்றுதுயர்செய்ய
வென்றுமடியாதுயிர்சோர்ந்தான்மென்மேலுங்
குன்றுமலைக்கடலிற்றோன்றுமதிவந்த. 9

மந்தரமேநட்டுவாசுகியைத்தாம்பாக்கி
யந்தரத்சரோடுமவுணரொருபாலாக
முந்தித்திரட்டிமுகந்தகுடத்தாரமுது
வந்துற்றதென்னமதிவானெழுந்தானே. 10

வேறு

அந்தகாரம்வந்துற்றதவ்வளவையும்விழுங்க
விந்தையாந்தமனியத்தொளிர்மாடங்கண்மேவி
முந்தையுற்றவையலவெனவொளிகொடுமூட
வந்ததிந்துவும்வாரிதியலரிடும்வாறே. 11

விரைசெய்தாமரைகூம்பியேமெலிவுறக்குமுத
முரைசெயற்கிலாக்களிப்பினிலோங்கிடவுலகோர்
கரைசெயாததோர்கடவிறைக்குற்றகண்ணடியைப்
புரையும்வண்ணமாயம்புலிமானமேற்பொலிந்த. 12

தத்தையாகியபரியுமின்றுவசமார்தறுகட்
சித்தசன்வருமுன்வருஞ்சின்னமாயுதித்த
கத்துகின்றநற்கடலெனுந்தாயொருகணவன்
வித்திலமலைபெற்றதோர்கலைகொள்வெண்ணிலவே. 13

வேறு

அழிந்தசிந்தையனம்புலியின்கதிர்
கொழுந்துவிட்டெரிதீயிற்கொளுத்தவே
யெழுந்துவேறொரிருக்கையிலெய்தினாற்
கழிந்துபோமனலென்னக்கருதினான். 14

எண்ணியேயவ்விடம்விட்டெழுந்துபோய்த்
தண்ணென்சந்திரகாந்தத்தலத்தினாற்
கண்ணிற்காணவொண்ணாக்கதிர்கான்றிடும்
வண்ணமண்டபமெய்தினன்வாசவன். 15

ஆண்டுசென்றுபூவார்ந்தவமளிமேல்
மாண்டுளோனெனவீழ்ந்துமயங்கினான்
தாண்டவம்புரிவார்க்குறுதையலை
வேண்டினானையவ்விந்துவிடுவனே. 16

சாளரத்தின்வழியிற்றவழ்ந்துபோய்
காளையைத்தன்கருத்தநுமுற்றுற
நீளலுற்றநெடுங்கதிர்க்கற்றையே
வாளதாகவன்மார்பிடையூன்றினான். 17

கன்னலேந்தியமாரன்கணையினால்
முன்னமென்னுடல்மூழ்கியிருக்கவு
மென்னகுற்றமியற்றியதாலெனை
யின்னமுஞ்சுடவிங்ஙனெழுந்ததே. 18

மடிகொணஞ்சமுதித்தகடல்வருஞ்
செடிகொணெஞ்சமுடைக்கொடுந்திங்களே
துடிகொளுமிடையாளைச்சுடாமலே
யிடிகொளுமெனையேசுடிலென்பயன். 19

விடையின்மேல்வருவான்றலைமேவியே
யுடையம்பாமென்றுளச்செருக்குற்றனை
படைகொண்டேதிரிவேடுவர்பற்றுதே
னடையென்றுன்னையழித்தொழிக்கார்களோ. 20

மதியிலாதபலாரைவருத்தும்புன்
மதிகொண்டோயுனைமாந்தரழைப்பது
மதியென்றேயதிலீற்றைவழங்குதல்
மதியென்றேயென்மனஞ்சொலல்வாய்மையே. 21

கொட்டமேபுரியுங்கொடியோயுனை
வட்டிலென்றுமயங்கிடுமோர்சில
ரெட்டிப்பற்றியெடுத்துமறைப்பரேல்
விட்டுப்போமென்மனத்துளவேதனை. 22

அன்னையும்விரும்பாதவனாகிய
வுன்னைநோவதிலென்பயனுள்ளதென்
றின்னல்பற்பலசெய்யுமுருவிலி
தன்னையுஞ்சிலசாற்றத்தொடங்கினான். 23

வஞ்சமாகமறைந்துயிர்வாட்டிட
வஞ்சுபாணமதேந்தியவங்கசா
கொஞ்சமேனுமிரக்கங்கொள்ளாதவுன்
னெஞ்சமென்கைப்படையைநிகர்க்குமே. 24

ஓங்குமாணவமோய்வுறவெண்ணிவே
டாங்கிநின்றகழைவிற்சரங்களைக்
கோங்கரும்பிற்குவிந்தமுலைப்பரை
வாங்கினுளெனின்வானெனக்குள்ளதாம். 25

விரும்பியேந்தியவில்லதுவேழமுண்
கரும்பதாயினுங்காண்டீபநாணுமே
சுரும்பருண்டிடுதூமலர்வாளிமுன்
னிரும்பினேவிற்குமில்லையோர்வன்மையே. 26

பாடுமிக்கயோகத்திற்பரனுற
வேடுதுற்றகணைவிட்டெறிந்தநீ
கூடிலாவுருவைப்பின்னுங்கொண்டது
வாடியாணிந்தவண்ணமழியவோ. 27

இந்தமண்டபமிந்தொடுவேள்வரச்
சொந்தமாகியதன்மையிற்றோன்றலான்
விந்தையாகியசோலையுண்மேவலோர்
தந்திரமெனவிட்டதைச்சார்ந்தனன். 28

பாரிசாதமந்தாரநற்கற்பகம்
வேரியாரரிச்சந்தனம்வேண்டின
வாரிநல்குஞ்சந்தானமலர்ந்துள
காரிரும்பொழிற்காட்சியைச்சொல்வதோ. 29

பாடலம்வகுளம்வில்வஞ்சண்பகம்
வாடிலாவழைநாகம்மயிலையு
மாடெலாஞ்சிறுசெம்பைநல்வாசந்தி
நாடருப்பலஞ்சேநாரிகேளமே. 30

மரகதம்வயிடூரியமாணிக்கம்
புரையிலாப்புட்பராகப்பொலிவொடு
மரமெலாமுளவாமெனின்வானவர்க்
கரையன்செல்வமளவிடற்காகுமோ 31

தேனுகுத்திடுமாமலர்வான்செறி
மீனினத்தின்விளங்கிடுசோலையி
லானமண்டபமற்பவனுப்புகை
தானுழைந்திடாவண்ணஞ்சமைந்ததே. 32

கொங்குலாமலர்க்காவின்றளிர்க்கொடு
துங்கமாயவமளியுற்ருன்றுய
ரங்குநீங்கிடக்காண்கிலனுசைநோய்க்
கெங்குற்ருறுமென்னுமெனவெண்ணிலான். 33

தாங்கினன்மதனெய்தசரமெலா
மேங்கினுனிளந்தென்றலெதிர்வர
வீங்கினுனுயிர்வெங்கனல்மீதெழ
நீங்கினனன்னெடும்பொழிறன்னையும். 34

இன்னவாறிங்கிருந்துயரெய்தினே
னென்னதின்னலவ்வேந்திளங்கொங்கையாண்
முன்னரெய்திலறுமெனமுன்னியே
பின்னருற்றபரிசையும்பேசுவாம். 35

இந்திரப்படலம் முற்றிற்று.



## போர்புரிப்படலம்.

தருவொடுமமுதும்பணிசெயவெழுவர்தண்மணிச்சிவிகையதேந்த
மருவளர்கூந்தலரம்பையர்குழுவும்வானவர்தொகுதியும்வாழ்த்துந்
திருவையுமறந்துவரிவிழியணங்கின்செவ்வியிற்றியங்கியமனத்தா
லரியபொன்னகர்விட்டவனியிற்சிறந்தவம்புயநகர்வயினடைந்தான்

வெடித்தளிந்தொழுகுமுக்கனித்தேறற்சாலியைவிளைத்திடும்
வியன்சேர், கடிக்கொளுங்கமலநகர்வயினுற்றகவினெலாங்கண்டபி
ன்காணுத், துடிக்கொளுமிடையாள்வதிதருமாடந்துருவினுன்மன
நிலேசொல்லின், மிடிக்குளாம்பேதைமேருவைக்கண்டங்குவப்புறு
நிலைமையேமேவும். 2

முகமொருகமலமிணைவிழிக்கமலமுகிழ்நகிலிரண்டுமேங்கமலந்
துகளிலாவங்கையிரண்டுமங்கமலஞ்சுழிபடுமுந்தியங்கமல
நகுமடியிரண்டுங்கமலமாயதனுனல்கியமுனிவனும்வாழும்
நகரில்மாநகர்ருங்கமலமென்றியம்பநேர்ந்ததுமரபெனநினைந்தான் 3

விற்படுநுதலுங்கண்கவர்வனப்பாமென்கழைத்தோள்களும்வி
யன்கொ, ளற்படுகுழலுமம்புயமுகைநேரணிதிகழ்பயோதரவமை
வும், பொற்புறுகுமிழ்நேர்நாசியும்பூவும்பொருதயர்சீறடித்துணை
யுங், கற்பகமாலேதுயல்வருபுயத்தான்கண்டனன்கற்பரசிடத்தே. 4

தாயினுமினியகருணையாளன்றன்னைமனத்திடுமுற்றவமிந்தவத்தான்
மாயிருஞாலம்புரந்திடுமைந்தன்சூர்பிற்படவுதித்தவன்மார்பிற்
றூயதாம்பரைப்பொற்பூரிருத்தித்துப்பலமைவிரல்களாற்றறைவந்
தாயமதிடையில்வதிதருகாலேக்கண்டனன்கண்களாயிரத்தான். 5

எழுவகைச்சூர்த்தாம்பேதகமுந்நாளமேழிறும்பேதமுமின்னிமை
வழுவிலாரகபேதமுந்விளக்குமாடகயாழ்தனைவருடித்
தழுவுதண்ணுமையுங்கோகிலநேராந்தனிக்குரலோசையுங்கூட்டி
மழுவமர்கரத்தெம்மிறைவனைவழுத்தக்கண்டனன்றவளவாரணத்
(தான். 6

கறைபடுகாமக்கடலினைக்கடக்கக்காண்கிலான்கற்பெனுமரிய (னை
சிறைபரிடையிருந்ததெய்வமாமணியைத்திலகவாணுதற்பசுங்கொடி
மறைமுடிவகனிலவுதருப்பொருளைவல்லவான்றுணிந்தனனகி
புறைவிடம்புகுதலுற்றனனகாமனுறுவலிக்காற்றினருளரே. 7

வேறு

கானுலாவியவாசமென்மலர்க்கந்திக்குழலங்கயல்
மீனுலாவியகண்ணிணைக்களிமெல்லியறுகொடிநுண்ணிடை
மானிலாவியமாடநண்ணியவானவர்க்கிறைவன்றனைத்
தேனிலாவியமாலையானிவனோகொலென்றுதிகைப்பொடும். 8

முட்டிகன்னசேதகனென்னுமொய்ம்பினோரிருவோர்களு
மட்டவிழ்ந்திடுகற்பகத்தொடைவேய்ந்தவானவர்தம்மிறை
கிட்டிவாய்தலினுட்புகுந்திடுமாண்மைகண்டுகிளர்ந்தெழுந்
துட்டதும்பியவெஞ்சினத்தினுறுத்துநின்றெலனவோதினா. 9

எற்றடுப்பவர்மாந்தர்நீவிர்சொலென்றுநச்சுநடந்திடுங்
கொற்றமேவியவச்சிரத்தனுரங்குலங்கிடவங்கையான்
முற்றுதன்வலிகொண்டுதாக்கினன்முட்டிகன்முனிவுற்றெதி
ருற்றவிந்திரனும்முவன்றரையிற்படக்கையின்மோதினன். 10

எற்றுமற்றவனைக்கனன்றுவிரைந்தெதிர்இவிமையோனிரு
பொற்றடங்கிரியன்னதோள்கள்புழுங்குமாறுதன்பொயம்பினுற்
சுற்றிவன்பினெருக்கிமுட்டிகனுஞ்சுழன்றுதிரித்தன
னற்றைநாள்கடலிற்றிரிக்கவமைந்தமந்தரமானவே. 11

தோள்பிணித்திவைசெய்தமாமுனிமைந்தனென்சுதனுக்குற
வேள்பிணிப்பவருந்துநெஞ்சன்வெகுண்டுமற்றனையன்னிரு
தாள்பிணித்துடன்மீயெழததலேகீழ்படத்தடுமாறிடக்
கோள்பிணித்திடுமேருவின்முடிகூடவானிலெறிந்தனன். 12

வேறு

விண்ணவர்க்கிறையோச்சியவிசையினின்மீண்டு
மண்ணகத்துறுமுட்டிகன்மதியுணர்விழந்து
கண்ணிமைத்திலன்கிடத்தலுங்கண்டவன்பின்னே
னண்ணுயிர்ப்பொடுமோடினனண்ணல்பானவில. 13

ஏகிமன்னவன்றிருவடியிறைஞ்சியெம்மிறைவ
பாகியைந்தசொற்குலமயினேன்பொடும்பயிலு
மாகமோங்கியகன்னிமாடத்தினுண்மறத்தாற்
றோகையைக்கவர்ந்தேகுமக்குறிப்பொடுந்துணிந்து. 14

புக்கனன்மகவானவணன்னதுபொழுது
பக்கநின்றதோர்முட்டிகனவனுரம்பதைப்ப
மிக்கமற்சமர்விளைத்துழியனையனல்விளிந்தோ
ரொக்கமண்ணிடைவீழ்ந்தனனுணர்வழிந்தென்றான். 15

இன்னசொற்கனல்மன்னவனிருசெவித்துளையுட்
டுன்னலும்விழியரக்கெனத்துடிதரவதரம்
பொன்னுரத்தணியொருவனும்புகுதரற்கஞ்சுங்
கன்னிமாடமோர்விண்ணவன்கடந்திடற்கெளிதோ. 16

நன்றுநம்வலியாணையுநாகநாட்டிறைவன்
வென்றியும்மெனப்பொங்கியவெகுளியோடெழுந்து
நின்றசூதனைநோக்கலுநிரைமணித்தடந்தேர்
சென்றிமைப்பினிற்கொணர்ந்தனன்சேனையுமெழுந்த. 17

கோனமர்க்கெழுமுன்னமாக்கொடிஞ்சியந்திண்டேர்
தானமாவினம்பரிக்குலந்தாட்படையாவு
மானவேல்விழிமாதராள்வாழிடம்புகுந்த
வானவேந்தனைவளைத்தனநாற்புறஞ்சுற்றி. 18

கச்சையோடுமெய்க்கவசமுங்கவின்பெறப்புனைந்து
வச்சிரக்கழலணிந்துவண்டாளிடைவடித்து
வச்சுறுத்துவாளரையிடைவீக்கியொண்டும்பை
நச்சிவாகையந்திருவுறநன்முடிமிலைச்சி. 19

ஓவிலாதபல்கலையுணருளமெனத்தகைய
வாவநாழிகையதுதனையகன்புறந்தாங்கிப்
பூவினேனிகர்நற்றவப்புலிமுனியளித்த
தேவர்மாபடைக்கலங்களுந்தெரிந்தனனெடுத்து. 20

புற்றிடங்கொளுமெம்பிரான்சேவடிப்போதி
னுற்றிடங்கொளுமுளத்தனுபுவங்கருள்போற்றிப்
பொற்றடங்கொடித்தேரிடையேறிநாற்புடைசூழ்
சுற்றமாந்தரோடெய்தினனமர்செயுஞ்சூழல். 21

ஆண்டிருந்தவச்சதமகன்றன்னைமுந்தடைந்த
மாண்டசேனையங்காவலர்மலைந்தெதிர்நின்று
தூண்டுமம்பினமழையெனச்சொரிந்தனர்துணைவிற்
சேண்டவிர்ந்தவன்றன்சிலையெடுத்தனன்சிரித்து. 22

வில்வளைத்தனனொலிகாட்டினன்வீரச்
சொல்விளைத்தனன்பல்கணைசொரிந்தனன்சொன்னக்
கல்வளைத்தவர்க்கன்புறுமயிலினைக்கவர்வான்
மல்விளைத்தவர்குழுவெலாம்வயின்வயின்மறுக. 23

விட்டவிட்டபல்கணைகளும்படைகளும்வெந்தீச்
சுட்டசுட்டவெண்பஞ்செனத்துலைந்தழிவெய்த
அட்டதட்டதிவ்வடுஞ்சரமானைபாப்பரித்தேர்
பட்டபட்டதென்றுரைத்தனர்பரந்தனர்வீரர். 24

சோனைவாரியிலிந்திரன்கணைபலசொரியத்
தானைக்காவலரமைச்சருந்தாக்கியபடையும்
போனநாற்றிசையிரிந்தனசிதைந்தனபொருது
மானவேற்படைமன்னவன்பின்னவர்மலைந்தார். 25

அயிலைநீக்கியவறுமுகன்சிலரெனவமைந்தே
கயிலைநின்றிவணெய்தியகாளையர்புகல்வார்
குயிலைவென்றசொற்குலமணிவிளக்கமேயனையாள்
பயிலுநற்றவவொளியிடைப்பதங்கநீயன்றே. 26

ஏகலுற்றனைமுறைநெறியெண்ணலைமுன்னு
ளாகமுற்றியகுறியுளாயறிவிலியென்னு
வேகமுற்றனர்வெங்கனலுமிழ்சரம்விடுத்தார்
நாகமுற்றவன்றானுமிங்கிவருளநடுங்க. 27

பிறைமுகத்தவாயம்பினம்பெய்தனன்பிறவித்
துறைமுகத்துறாங்கவைபொடிபடத்துணித்தார்
மறைமுகத்தியையேழமைமதியினுணரான்
கறைமுகத்ததன்னத்திரம்விடுத்தனன்கனன்று. 28

கூடுமப்படைபற்பலகுலிசமுங்கணைப்பு
மாடுமிழ்ந்தெரியனலெனவருதலுமைந்தர்
நாடியப்படையதனையேயுய்த்தனர்நணுகி
யீடில்வெஞ்சமரிழைத்தனமீண்டனவிரண்டும். 29

மாந்தராரிவர்தம்மையேயார்பொருளெனமதித்துப்
போந்தவிச்சமர்நன்றுநம்புசழ்க்கெனவுள்ளங்
காந்திவெல்குவன்சூழ்ச்சியிலென்றுளங்கருதா
வேந்துமாயையங்கணையினையுய்த்தனனிமைப்பின் 30

அன்னமாப்படைபுகுதருமளவையிலிருண்ட
துன்னுநாற்றிசையாயிலாராயவர்நெஞ்ச
மன்னுநல்லுணர்விழந்தனமாய்ந்தவரொப்பப்
பொன்னெடுங்கொடித்தேரிடைவீழ்ந்தனர்புலர்ந்து. 31

இளையர்வீழ்ந்ததுமிந்திரனுவகையுமெல்லா
முளையுநாணொடுநோக்கியவொருதனிவேந்தன்
தொளையெயிற்றரவிறையெனச்சீறினன்றனைவில்
வளையுமாப்படைதன்னொடுமேற்றெதிர்வந்தான. 32

மேருவன்னதன்சிலையினைமிகுவலித்தோளாற்
பேரவண்டமுநாணொலியிறங்கிடக்குனித்துப்
பாரும்விண்ணுமறைதரப்பாயவெண்டிசையுந்
தூருமின்றெனக்கணைமழைதூற்றினன்றுளங்கா. 33

மேகநாதனுமுள்ளசம்வியந்தனன்விண்ணோர்
மாகநண்ணினரிருவரையுணர்ந்திலர்மயங்க
வேகநாதனையிளமதிமுடியனைச்சேர்வான்
பாகம்வேட்டமரிளங்கொடிதானுமுட்பனிப்ப. 34

சிரத்துமார்பினுந்திரள்புயமலையினுஞ்செவியிற்
கரத்தும்வார்கழற்றாளினுங்கணைபலவழுந்தப்
புரத்துமுன்னகைசெய்தவப்புனிதனார்கணத்து
ளொருத்தனோடுமவ்வும்பனுமுடன்றமர்புரிந்தான். 35

எவர்தாமுமிங்கிவர்செயலிதுவெனவுணர்தற்
கோவிலாதிவரின்னணமுருற்றுழிச்சமரந்
தேவர்கோனுளங்கிசைப்பொடுமிங்கிவன்றன்னைப்
பூவிலேயோர்நரனென்பதும்புன்மையதன்றே. 36

இங்கிவன்றனைவெல்லுதலெளியதன்றின்னே
தங்கியிச்சமரிழைக்கிடிற்றாழ்த்திடும்பன்னாட்
டுங்கவச்சிரமதுதனைத்துண்டினன்றுணிந்து
மங்கையைக்கவர்ந்தேகுவலென்பதுமதியா. 37

வெற்றிவெங்குலிசந்தனைவாங்கினன்விதிர்த்துக்
கொற்றமுற்றுமக்குஞ்சரனார்த்திடைக்குறித்துச்
செற்றிவன்றனைமின்றியென்றுய்த்தலுஞ்செம்மற்
பொற்றடந்திருமார்பினுட்புக்கதப்படையும். 38

ஒற்றமற்றவனார்த்திடையுருவிநீண்டுடுத்தோன்
மாடுசென்றதுவச்சிரமணிமுடிவேந்தன்
கூடுமாவிபோயுலந்திலன்குலியுணர்விழந்தான்
பீடுசார்ந்தநற்சேவையிற்பெருமனாருளால். 39

அனையதாயினுமம்பிகையாற்றுநற்றவத்தின்
வினையுமாந்தனாருள்புரிவிருப்பினுற்றிங்கள்
புனையும்வேலையக்குஞ்சரமன்னவன்போரி
வினையனாயநெய்திடவிழைத்தனனன்றே. 40

வேறு

நேரிழைபொருட்டாவெய்திநெடுஞ்சமரிழைத்துநின்ற
சிரியரினையவெல்லாஞ்சிதைந்தமைதானும்பின்னும்
போரியற்குரியர்யாருமிலரெனும்பொருளுநோக்கிப்
பூரியவினையனுள்ளம்பொங்கியவுவகைத்தாகி. 41

வெள்ளிவெண்முறுவற்செவ்வாய்விளங்கிழைத்திருவையெந்த
னுள்ளுயிர்தனைவவ்வுமோர்டரித்தடங்கண்மானைத்
தள்ளுதற்கரியகாமத்தழல்சுடாவண்ணந்தாழ்ந்து
எள்ளறவிரந்துநிற்றலினியதென்றிவைவிளம்பும். 42

வேறு

என்னுயிர்க்குயிரேயென்னருமருந்தேயென்னுளக்கோயிலிலம
ர்ந்த, பொன்னினுமுயர்வாமேனியாரமுதேபுண்ணியமுருவுகொண்
டன்ன, நன்னுதலணங்கேஞாலமீதமருநங்கையர்தமக்குநாயகமே,
கன்னல்வேளெய்யுமலர்க்கணைக்குடைந்திங்கெய்தினன்காப்பதுன்க
(டனே. 43

சூட்டராமுடியிற்கிடந்தபூதலத்திற்றாயவிண்பாதலமிவற்றிற் பாட்டளிமுரலுந்தொடையல்சூழணங்கேகண்டனன்வனிதையர் பலரை, நாட்டமூன்றுடையாளொருபுடையமர்ந்தநங்கையுமிணையிலையென்றான், வேட்டவையளிக்குங்கற்பகநிழற்கீழ்வீற்றிருந்தமரரைப்புரப்பான். 44

உருவிலிதனக்குமகுடமதென்னவுயர்ந்தெழுந்திரக்குமுள்ளாகாப் பருவதமிரண்டைப்பொருத்தியதென்னப்பசலைதொளிர்தருதனத் தாய், மருவமர்சணைசளிங்கையுந்தாழைவாளையுமேந்தியம்மதன, னொருவகையானுமீள்கிலாவாறென்னுயிரினைவருத்துதலுணராய்.

என்னினிப்பிறநீயெண்ணுதற்குளதாமென்றொடுஞ்சமரிழைத் தோய்ந்த, முன்னவராற்றலுணர்தியாலின்னேமூன்றுபேருலகமுமேத்தப், பொன்னுலகினர்க்குமிறைவியாயடியேன்புலம்படுதுயரெலாநீக்கி, மன்னுதியணங்கேயென்றிரந்தவடன்மாடுசென்றிட்டனன்மகவான். 46

துணைவர்கள்பலருஞ்சமரிழைத்தாவிதுலைவுறநேர்ந்ததுங்காமன் கணைபலசொரியக்கற்பகவேந்தல்காதல்கூர்மொழியிவைபுகன்றுள் ளணையுமக்குறிப்புங்கண்டனளினியுமாருயிர்துறந்திடாதமையி னிணையிலாத்தீமையெய்துமின்றென்றுயிழைத்தவாறனைத்தையுமி (சைப்பாம். 47

வேறு

பொன்னஞ்சிறகற்றுவருந்தியபுள்ளெனத்தன்
முன்னஞ்சமைவுற்றவலத்தினர்மொய்ம்பிழந்து
பின்னஞ்சமரிற்படநோக்கியபெற்றிதன்னை
லன்னந்துயர்வேலையழுந்தினளாயமோடும். 48

அனையில்லவெளிவ்வழியுள்ளமழுங்கிநிற்கும்
வினைதன்னையுமிந்திரன்றன்னுளவேட்கைதானுந்
துனைவில்லயலோர்மகளோடினநியமன்னர்
மனையிலலவர்மாடுநவின்றனள்மாதராரும். 49

தீயிற்கொடிதாகியவெஞ்சொல்செவிக்கணேற
வாயிற்புனலற்றனர்நெஞ்சம்வரண்டுயிர்ப்பும்
வீயத்தரையுற்றனர்மேனிவிளிந்ததொத்தார்
ஆயத்தினர்தாங்கினரன்பொடுமாற்றினரால். 50

சித்தம்பிறழாநெறிமாதவத்தின்புலித்தா
ளத்தன்னமைநல்கினனீங்கிவர்தம்மையாய்ந்து
வித்தன்மையதாயவிடும்பைகளெய்துமென்னி
னித்தன்மொழியும்பிழையாயதுநீணிலத்தில். 51

என்னப்பலவுன்னிமயங்கியிரங்கியுள்ள
மின்னற்பரவைக்கணழுந்தியவேழைமார்பின்
செந்நெற்பழனத்திருநாடர்சிதைந்தசூழல்
துன்னிச்செயல்கண்டிடினந்துயர்தீருமென்று. 52

போயுற்றனர்வார்குழல்பூந்துகிலோடுமண்ணிற்
றோயத்துணைவாள்விழிசெம்புனல்தூற்றவன்பின்
வேயுற்றிடுதோளியையெய்தினர்நோக்கவும்வெந்
தீயிற்படுமஞ்ஞைகளாமெனத்தேம்பினரால். 53

வேறு

பார்த்தாரிளமயிலைப்பார்மீதொருபாலிற்
போர்த்தான்முடித்துமகிழும்புரந்தரனை
வேர்த்தாரினிவேல்விழியாளுயிர்வாழக்
கார்த்தாருமாண்டவிளைவின்செயல்காணார். 54

முன்னோரைவேட்டமுனிமாதர்தன்முன்னே
பொன்னாருமேனிவிழியின்புனல்மூழ்க
என்னேவினிநஞ்செயலென்றிளைப்பார்க்குத்
தன்னேரிலாளுஞ்சிலசாற்றலுற்றாளே. 55

பேதைப்பிறவியுடையேன்றனைப்பேணி
வாதைக்குளாகிமகவான்றெறமாண்டார்
ஏதப்படாமலினியானெறிமூழ்கிச்
சீதப்புனல்சூழ்சடையோனைச்சேர்வேனே.

அக்கவடமுமரவுமணிவார்மேன்
மிக்கவிழைவாம்விரதந்தனைப்பேணி
யிக்குவலயத்திலிருந்தேனிமையோர்கோன்
றக்கதுணரான்றவறேநினைந்தெய்தி.

வந்தானெதிர்கண்டவாயிலுறைவாரு
மந்தோநீயாவனெனவுமறியீரோ
கொந்தாருங்காவுமமுதுங்குடியாகி
நந்தாதபொன்னாட்டிறைவனென்றானே. 58

ஆவரெனினும்புகுதமுடியாத
காவலுடையகன்னிமாடத்தி
லாவலொடுநீயடைந்ததிறைகாணிற்
பாவியுனதுயிரைப்பற்றுவான்காலனுமே. 59

என்றுமொழியுமிருவர்தமைநோக்கி
நின்றநுமதுநிறமேவிளிநீவிர்
பொன்றிவானெய்திப்புனைமாமயிலாளை
யொன்றியான்வாழக்காண்பீருவந்தென்றான். 60

கேட்டாரிருநோக்குந்தீயின்மிகக்கெழும
வீட்டியிவனைத்துலைத்தல்வினையென்றாப்
பாட்டாரளிசூழ்தொடையார்மற்போர்பண்ண
மாட்டாதயர்ந்துமன்னற்கறிவித்தார். 61

முன்னோரிருபானொருநால்வர்போர்மூண்டு
மன்னற்குரியனவாநாற்படையுமண்மலியத்
துன்னியேவாசவனைத்தூர்த்தார்சுனைபலவா
லன்னதழித்துக்குலிசமெடுத்தார்த்தான். 62

பாவியெடுத்துவிடுத்தபடைதன்னா
லாவியழிந்தேவவனிதனிலானார்
மேவியனையான்விரைந்துகவராமுன்
காவிவிழியீர்தீப்புகநான்கருத்துற்றேன். 63

முன்னைவிதியின்வலியான்முடியுமிவைக்
குன்னியழியிற்பயனுளதோவொண்கமலப்
பொன்னையனையீரப்புலையோன்விழைந்தவுட
றன்னைவிழையேனிவண்பொழுதுதாழ்த்தினியான். 64

வெற்றுடலநீத்தேவிளியுமுனமும்பா
லுற்றுரைக்குமாற்றமுளதாமுணர்ந்திடுமின்
பெற்றநுமதுகுலத்திற்பிறந்துறுவோர்
முற்றுமெனையேமுதற்கடவுளாய்ப்பேணி. 65

மக்கடமக்குமணந்தான்புரிந்திடினும்
மிக்கவிடும்பையுறினுமிகைதீர
வெக்கருமமாற்றுகினுமுந்திரும்புனலுட்
புக்கினிதுமூழ்கிப்புனிதமுறுகடத்தில். 66

தூயபுனலாணிரப்பித்துணர்மாவின்
மேயவிலையும்வியன்முப்புடைக்காயுந்
தோயவமைத்துமலர்மென்றொடைசூட்டி
யேயவரிசனஞ்சேர்த்திலகுதுகில்சாத்தி. 67

காணநிலத்தினொருபாற்கவின்றருமுக்
கோணமதனுட்குயிற்றுமொருபீடத்
தூணிலவுஞ்செந்நெலொளிரச்சொரிந்தாங்கு
வேணுறுபொற்கும்பமிருப்பவினிதேற்றி. 68

அல்லலகற்றியெவர்க்குமருள்புரியுந்
தொல்லையிபமாமுகனைத்தொழுதேத்திப்
பல்லியங்களேங்கப்பனிமொழியீரென்றன்னை
வல்லமனுவால்மரபினுயிர்ப்பித்து. 69

ஆயுமலருமரிசனஞ்சேர்வல்சியொடு
தோயவருகுஞ்சொரிந்துதுடர்வினையைக்
காயுமரியகருப்புரமுநல்வாச
மேயபுகையுமிலகவினிதேற்றி. 70

செஞ்சாந்தமோடுசெறியுமகிலாதி
யெஞ்சாதயாவுமணிவித்தியல்பூசை
துஞ்சாதவன்பிற்றுடங்கியெமைத்துதிப்பி
னஞ்சாரெத்துயர்க்குங்கலிக்குமவணிமிசை. 71

மன்னுமளியாலிவையான்வகுத்துரைத்த
துன்னிமறவாதுறுதியொடுபேணிற்
பின்னைவருநங்குலத்தோரைப்பெட்பினொடு
மன்னையெனவேயளிப்பனருளோடும். 72

வேறு

என்றருட்குலவர்த்தனியியம்பியிம்மொழிகள்
மன்றலங்குழன்மாதரார்மாழ்கியுண்ணையத்
தன்றவத்தினாற்பிரமரந்திரத்தினைத்தாவத்
துன்றியுள்ளுறுகனலினைத்தூண்டினடுணிந்து. 73

தூயவெண்மதிசென்னியிற்சூடியதுணைவன்
சேயதாமரைக்கழலிணைசெறித்தநெஞ்சினளாய்க்
காயுமவ்வனறன்னுடல்கதுவிடக்கணத்துட்
டேயுநுண்ணிடையொளித்தனடெழுமரவெவரும். 74

பற்றுவானருகெய்தியபாதகனந்தோ
பெற்றவெற்றியுமழிதரப்பேணதயிங்கிவள்செய்
துற்றவிச்செயலென்னிதுவுண்மையோவிவடான்
கற்றமாயையின்சூழ்ச்சியோகருதுதற்கரிதால். 75

மாங்குயிற்குநேர்மொழியொடுமயிலியற்சாயற்
றாங்குதற்கிலாப்பணைமுலைசுமந்துதள்ளாடி
யேங்குநுண்ணிடைமாண்டனளிறைவருமாண்டார்
நீங்கலுற்றதென்னசையுநின்றதுபழியே. 76

என்செய்வேனினியெவ்வகையுயிர்சுமந்திருப்பேன்
கொன்செய்பூணினாள்பேதையோன்கூறியதனைத்துந்
தன்செவிக்கியலாதெனத்தழலிடைக்குளித்தாண்
முன்செய்தீவினைத்துடரினால்மூண்டதிக்கொடுமை. 77

விண்ணுளோரெலாநகைசெயவிந்தையான்மொழியா
னண்ணியெய்தியபரிபவநன்றுநன்றெளிய
மண்ணிலோர்மகளென்பதுமடமையோரிவளைக்
கண்ணிலோர்முறைகாண்பனோவிளியெனக்கலங்கி. 78

நின்றவம்மகவான்றனைநிகரில்கற்பரசி
கன்றனிப்பழிதாக்கலுமதிநிலைதளர்ந்து
பொன்றுதன்னிலையுணர்கிலாதுருவமுந்திரிந்து
பின்றிசைத்துளம்பித்தொடுமுலைந்தனள்பின்னர். 79

கண்டுமற்றிவையனைத்தையுங்கார்மயிலனையார்
கொண்டவச்சமுந்துயரமுமெதிரெதிரோப்ப
வண்டர்நாயகன்றன்புடையமர்ந்தவவ்வுமையே
பண்டுநந்தவத்திம்மனைபயின்றனள்போலும். 80

துன்பமெய்துழியுடற்சுமைதுரந்திடவெளிதே
யின்பம்வேறுளதோவெவரிதுசெயத்தக்கோர்
புன்புலத்தினேமித்துயர்பொறுத்துயிர்தாங்கிப்
பன்புலத்தலையெய்துறுபெருமையுமுளதோ. 81

கன்னியிங்கிவள்மணவினைகாண்பதென்றென்று
னுன்னியேங்கியமுன்னவருறுதுயரோடும்
பொன்னினுடைநலழிந்தனர்போக்கரும்வினையோ
பின்னையின்னிலைகாணவோவிதித்தனன்வேதன். 82

போற்றுநுங்குலத்தெய்வம்யானெனப்புகன்றகுரு
னீற்றணிந்தவன்றுணைவியேயிவளெனநினைந்து
சாற்றலேமரபலதினிச்சாம்பியுள்ளழித
லேற்றதன்றுநம்மேழைமைமதியிறலென்று. 83

நின்றுயிர்த்தனரனலெனநீங்கியமன்னர்
பொன்றியுற்றவச்சமர்த்தலம்புகுந்தனர்நோக்கித்
தன்றுணைப்பெருந்தலைவரைமார்புறத்தழுவி
யன்றில்பற்பலவாமெனவரற்றினரழுது. 84

வேறு

மதியிருக்குஞ்சடையோனைமனத்திருத்திநாள்கழித்தமங்கைக்காக
நதியிருக்குந்திருநாட்டூர்நாற்படையுந்துணையாகநாட்டிவானோர்
பதியிருக்குமிடந்தேடிப்பயமிருக்கப்போர்செய்தும்பயனற்றந்தோ
விதியிருக்கும்வழியாகவினையிருக்கக்கொடியோனைவெறுப்பதென்
(னே. 85

வில்லாருநுதலாண்மேல்விருப்பாகிமதன்கணையான்மெலிவதாகின்
நல்லோர்சொல்விழையாதசெயல்கொண்டேநெடுமாடநண்ணினனெ
றெல்லீருமிவண்வந்[illegible]மோனைமுடிசாய்த்திரெனக்கேளாது
கல்லானமனத்தோனுயிர்போனிரெனக்கேட்டல்கலியின்சூதோ.

ஆடெடுத்தவம்பலவனிருந்தோங்குந்தில்லைநகரணைந்தேயெம்மைப்
பாடெடுத்தவேதவிதிப்படியணைந்தவிளங்கோவீர்நும்மைப்பற்றி
மாடெடுத்தநகரத்தான்மனத்தடுத்தமயக்காலேமாய்த்ததன்மை
யேடெடுத்தகமலமுனிக்கெடுத்தியம்பவெவரேனுமிலையென்செய்
(வோம். 87

சிந்தைதனின்முனமுனிவன்பன்னியின்மேல்விழைவுற்றேதீ
ராநோயாம், விந்தையுறுமடவார்தங்குறிகளாயிரமுந்தன்மேனியு
ற்றும், வந்ததிலைமதியின்னம்வச்சிரமாம்படையாலெம்மன்னர்மா
ண்டார், ரெந்தைபுலிக்கான்முனிவனீதுணரினிவனிலைமையினியா
தாமோ. 88

எதுவைதனிலெனதுகரம்பற்றுங்காற்பிறமாதைமனத்தாலே
னும், விதுவிரவிமாறிடினும்விழையேனென்றுரைத்ததனைவிடுத்து
வானிற், பதுமநிகர்விழியாரைச்சேர்ந்தாலொண்ணெருமாதுப்பனித்
தோளோர்மா, திதுபொழுதுமுறையாடாதிருப்பதுவோவெனவிறை
கமலேங்கிவீழ்ந்தாள். 89

கதங்கொண்டேதனைவாட்டுங்காமனெடுஞ்சமராடக்கருத்திலாது
மதங்கொண்டேயெமதாசைமன்னவரோடமராடிமடித்தானிவ்வற்
புதங்கண்டோர்மலர்நாமமுனிபாலேபுகல்வாரேற்புலையற்குற்ற
யிதங்கொண்டவெழுமுனிவர்சிவிகையதேந்திடுசெல்வமிழத்தல்தி
(ண்ணம். 90

முப்பாரனுடைரறமுமியற்றியேயின்னுட்டைமுறையோடாண்ட
அப்பாடுசடையோன்றனடிக்கமலமனத்தலருமாசேயுன்னை
யெப்பாடுமில்லாதவிந்திரனேமுடித்திடவுமினிநானந்தோ (ள்.
விப்பாடுபடவயனும்விதித்தனனேயெனவொருமாதேங்கிவீழ்ந்தா

பனிமொழியாரிவ்வாறுபடர்க்குள்ளாய்மெலிவதனைப்பகலோனுள்ளக், கனிவினொடுங்கண்டந்தோவானமிசையானுலவுங்காலந்தன்னி, லனையாவாளரிமுழ்கவறுநால்வருயிரோயவானுரென்னவினியுலகம்பலபேச விருப்பதுவோவெனக்கடலி னிடைப்பட்டானே. 92

வேறு

இன்னதாகவிங்கிவர்செயலிவையெலாமருகிற்
முன்னிநோக்கியவேவலனொருவனுட்டுடிப்பச்
சொன்னடுங்கமெய்பதைத்திடக்கண்கணீர்சொரிய
மன்னுமாமுனிமாடுசென்றவனடிவணங்கி. 93

மைந்தர்பட்டதுமடமயிலுற்றதுமனைவாழ்
பைந்தளிர்ச்சிறுமெல்லடிப்பவளவாய்மடவார்
நைந்திரங்குறுநிலைமையுநவின்றனனதனைச்
சிந்தைதூயனுமுனிவனுஞ்செவிபொருதயர்ந்து. 94

பஞ்சின்மெல்லடிப்பாவையைப்பல்படைசூழுங்
குஞ்சரன்முதற்காளையர்தமையுளங்குறித்து
நெஞ்சமானதுவனலிடுமெழுகினைநேரக்
கஞ்சனைப்பொருஉமுனிவனும்பலசொலிக்கரைந்தான். 95

வேறு

விருப்பொடுவெறுப்புமில்லாமேலவர்குழுவைநாடி
யிருக்குமென்னுளத்தின்மென்மையிதெனக்காட்டவீசன்
கருக்குழிதனிற்புகாதார்கான்முளையாகத்தோன்றி
மரித்திடவதனாலுள்ளமாழ்கிடமகிழ்ந்தான்போலும். 96

களங்கமில்மதிமுகத்தெரிங்கன்னியின்வனப்பையெல்லா
மளந்திடவாருங்கொல்லோவவனியிலவடன்கற்பே
விளங்கிடத்தீயின்மூழ்கும்விதியுமொன்றிருந்ததன்றே
விளம்பிறையணிந்தசென்னியிறைவனின்கருணையிதோ. 97

வானோர்நெடுங்கணுடன்றவத்தினின்மகிழ்வதாகி
யானவேகாட்சிதந்திங்கருங்கவின்முடிப்பாயென்ன
மூனுமாதரத்தினேற்குமுடிபிதுவாகக்கேட்கக்
கோனுநுவிதியுநின்றதென்றெவர்குறிக்கற்பாலார். 98

பொறிவழிமனஞ்செலாதபுனிதனும்புலம்புங்காலை
யறிஞர்களாங்கணுற்றராழ்தனரசரமோடு
நெறிபடர்சரமுநீளவேங்கினநெஞ்சுபுண்ணாய்
வெறிகொளுமலருங்கண்ணீர்விட்டுநின்றழுதமாதோ. 99

கன்னியையணையென்றுள்ளங்கருதலனுகிப்புன்மை
யுன்னிபிங்கிவைகள்செய்தோனிந்திரனொருவனன்றோ
பொன்னகரதனிற்சிந்தாமணிபொலந்தருவார்போக
மன்னியசெருக்காலன்றேமறந்தனன்றனதுதீமை. 100

ஆதலாலிவனுக்குற்றவரும்பெறல்வாழ்க்கையோடு
போதுலாங்காவின்செல்வந்தன்னையும்போக்கினாலும்
பாதகஞ்சூழ்ந்துபற்றப்படருழந்திடும்மைக்குள்ளாய்
வேதனைபபடச்செயேனேல்விண்ணவர்நகைசெயாரோ. 101

என்னவிங்கனைத்தும்பன்னியிரக்கமுமுனிவுங்கொண்டு
தன்னிலைமறந்தோன்றன்னைத்தழுவியமருளைநீக்கி
யென்னிதுமதியிலார்போலிடழிந்திரங்கலுற்றேன்
முன்னவனருளினியாவுமுடிந்திடலுணர்ந்துமந்தோ. 102

திங்களங்கண்ணிவேய்ந்தோன்றிருவுளப்படியேயான
திங்கிதைச்சிந்தியாதுமேல்செயத்தகுவதாகு
மங்கவரனைத்துமின்னேயாவிபெற்றெழுமாறுன்னிச்
சங்கரியருளைவேண்டிச்சால்புறவினியதென்னா. 103

வேறு

தூயமாமலராற்றின்றுறையினின்
மேயபுற்றுளமர்ந்தருள்மேலவற்
கேயதாயவிடப்புறத்தெய்தியே
நாயகனருளுடுமுளத்தொடும். 104

தனதுளத்திற்றலைப்படுமன்பினாற்
புனிதநீர்க்கடமொன்றுபொலிந்திட
வினிதமைத்தங்கிமவரையீன்றருள்
வனிதைதன்னைவருத்துமனுவினால். 105

உலகம்யாவுமுயிர்த்தவிமவரைத்
திலகவாணுதற்செல்வியையுன்னியென்
னலகிலாத்துயர்நீக்கிடவன்பினிங்
கிலகுகும்பத்தெழுந்தருள்வாயென. 106

தங்கவாறிவைசாற்றித்தவமுனி
மிக்கபூசையியற்றினன்மேலினி
யிக்குமென்மொழியாளவணெய்திப்பி
னக்கனார்மணநண்ணியதோதுவாம். 107

போர்புரிபடலம் முற்றிற்று.

---

## திருமணப்படலம்.

இவ்வழியினையரிவ்வாறிருந்தனரிதனையெல்லாஞ்
செவ்வழியினர்கட்கல்லாலெதிர்வராச்செல்விபோந்து
வெவ்வமதனையார்தம்பாலகற்றிடவிரங்கிச்சாலை
யவ்வழிமுனிவன்றந்தவரும்புனற்கடத்தினின்றும். 1

செங்கயல்மருட்டுங்கண்ணுஞ்சிறுமதிநுதலுங்கோப
மங்கியவமுதவாயும்வடிதகுசிற்றிடையுஞ்சோதி
பொங்கியகிரணத்தூசும்போற்றுசிற்றடியுமாகி
மங்கையம்பருவத்தோடுமகிழ்தரவுதிக்கலுற்றாள். 2

மணங்கிளர்நறைமெல்லோதிமாதினையிறைஞ்சிநோக்கி
யணங்குநீயார்கொலென்னவருமறைமுனிவினவ
யிணங்கியதவத்தினோய்முன்னிருபதினல்வரோடும்
வணங்கிடைமகளாய்ப்போந்தமலைமகளியானென்றோதி. 3

ஏழைமைமதியாலெய்தியிந்திரனுற்றவாறும்
வாழியமைந்தரெய்தும்வண்ணமுமுணர்த்திநிற்கத்
தாழியசடையெம்பெம்மாற்றணந்தவத்துயரந்தீர
வீழியவாமங்கூடும்விருப்பினேனென்றிசைத்தாள். 4

முற்றியவுலகிற்கெல்லாமுதல்விதன்மொழிகேட்டுள்ளம்
பற்றியகாதல்பொங்கப்பிறவம்பலித்ததென்று
வற்றியவுடலன்வாழ்த்திவணங்கினன்பின்புபோதப்
புற்றயனொருங்கியன்புங்காதலும்போர்ப்பநின்று. 5

தந்தனையனைத்துங்காத்துத்தவிர்த்தனையின்பதுன்பப்
பந்தனையாவுமாதிபகுத்துணரறிவுமாதி
சிந்தனையாதியெல்லாச்செயற்குரியாதியாதி
வந்தனையருள்செயாயேல்மண்மிசையினிவாழ்வுண்டோ. 6

என்றுபற்பலவும்பன்னியிரங்கிடவிறைவனோர்ந்து
குன்றிறைகுமரியுள்ளக்குறிவழியருளைநல்க
முன்றருவிருப்பினோடுமூரிவெள்விடையின்மீது
நின்றனனியமோரைந்துநெருங்கிநின்றொலித்ததும்பர். 7

வேறுபல்தொகுதியாயவிண்ணவர்குழுவும்வாச
நாறியகமலத்தோனுநாகணைப்பள்ளியானும்
வீறுடைக்கணங்கடாமும்வெள்ளரிமுகனையாதி
யீறிலாப்புதல்வராருமிருமருங்கிருந்துபோற்ற. 8

காவலன்றன்னைக்கண்டேகயல்விழியருவிகாட்டப்
பூவினிற்படிந்தெழுந்துபொலங்கொடிபுளகம்பொங்கி
யாவலுட்கிடப்பநின்றாளையனுமருகினெய்தி
யோவியமனையாயொன்றுமஞ்சலையுவந்தேமுள்ளம். 9

தண்மைநீர்மகண்மற்றோரைத்தணிப்பருஞ்சினத்தான்முன்னி
வெண்மையிலிசைத்தவேதமெனைப்பிரிவித்ததின்றாள்
கண்மயிலனையாயுள்ளக்கருத்தினையுரைத்தியாவும்
வண்மையிற்றருவலென்றுவகுத்தனன்கருணைவாய்ப்ப 10

செஞ்சடையமலன்செப்புந்திருமொழிசிரத்தினேற்று
வஞ்சியுமிறைவவய்ந்தேனெழுத்துநின்சணைத்தராய
குஞ்சரனுதிபைந்தார்குழுவினைக்குலிசவேந்தைத்
தஞ்சமதளித்துக்காத்தறகுதியெனப்பிறைஞ்சிநின்றாள். 11

பொற்றொடியருளின்வீக்கம்புனிதனுமுணர்ந்துநக்குச்
சிற்றிடைப்பெருங்கணங்கைதிருமணிக்கடகச்செங்கை
பற்றினனமரரார்த்தார்பணிந்தனரெதிரினின்ற
குற்றமின்முனிவர்றானுங்குவித்தகையோடுமண்ணில், 12

தேனுலாயுறைந்தகங்கைச்செல்வியுஞ்சினவேறூய
வானவரந்திதானும்வணங்கினர்வழுத்தலுற்றார்
கானுலாங்கொன்றையானுங்கண்ணருள்புரிந்துபின்பு
மானவமுனியைநோக்கிமாற்றமொன்றருளிச்செய்வான். 13

தோகையிங்கெழுந்ததெய்வத்தூயவக்கரகநீரை
வாகைகொளிளைஞரோடும்வச்சிரன்மீத்தெளிப்பி
னோகையினுணர்வரென்றுவுணர்த்தலுமுனிவன்றாழ்ந்து
மாகநீள்கமலையங்கட்சென்றனனருளைவாழ்த்தி. 14

அமரிடைப்பட்டுவீழ்ந்தவாள்கரிபரிகளாய
தமரொடுங்குமரர்தாமுந்தாமரைமுனிவன்பெய்த
திமிரமதகற்றுநீராற்றெளிந்தனரயர்வுமற்றார்
நிமிர்தருகுலிசவேந்துநீர்மைவந்தறிவுபெற்றான். 15

அங்கவருணர்வுபெற்றிவ்வருளினையுணர்ந்துசாலப்
யொங்கியகளியராகிப்போந்தனர்புனிதனோடு
மங்கையையிறைஞ்சிநோக்கிமயிர்ப்புறம்பொடிப்பத்தாழ்ந்து
வெங்கரியனையமைந்தர்விருப்பினிற்றுதித்துநின்றார். 16

மயக்குறுமனத்தனாகிமதியிழந்தவலமுற்ற
வயக்கரியிறைவனெந்தையருளினின்மனத்தியைந்த
தியக்கமுஞ்சிறிதுமாறச்செய்தவத்தீமையுன்னி
யியக்கர்கின்னரர்களோடுமெம்பிரானிருக்கையெய்தி. 17

குலைவுறுநாணந்தன்னாற்கோட்டியமுகத்தனாகி
மலையுறுவில்லினானைமயிலினைப்பணிந்துமாண்பில்
புலையுறுசிறியேன்புன்மைபொறுத்தமையருளேயல்லாற்
கலையுறுசடிலவென்னைக்காத்திடவிதியுமுண்டோ. 18

மண்ணுளார்வானோர்க்காகவல்விடமுண்டுகாத்தா
யெண்ணிடாதன்னையோடுமிணைந்தவன்பிழைபொறுத்தாய்
புண்ணியமுணரார்விட்டவழுவையின்போர்வைகொண்டாய்
தண்ணளிக்கடலேபேதைதனக்குமுன்கழல்தந்தாண்டாய். 19

பேதையேன்மருளிற்செய்தபிழைபெரிதனைப்பொருத்த
தாதையேயன்னையேயென்னத்தாழ்ந்துபன்முறையும்போற்றத்
தீதெலாம்பொறுத்தோமென்னத்திருவருள்புரிந்தபின்னர்
போதினார்முனிவன்றானுந்தாணுவோடிவைபுகன்றான். 20

…ரிப்பெருந்தலைவநின்னைத்தணந்திவணடைந்துபன்று
னுணிப்பருந்தவத்ததையன்பினேற்றமைக்குவந்தாயென்னிற்
குனிப்புறும்புருவவில்லாள்குறிப்பினைநிரப்பும்வண்ண
பினிப்புறும்வதுவைக்கோலமளித்தியென்றிரந்துநின்றான். 21

வேறு

அவ்வாறேயமைகவெனவலைமருகனயன்முகத்தையருளினோக்க வெவ்வாதகளிப்பினொடுமுய்ந்தனமென்றெதிர்பணிந்துமயனையுன்னச், செவ்வேதின்றொளியுமிழுஞ்செழுமணிகளிடையழுத்திச்செம்பொற்றிட்டும், வெவ்வேறுமண்டபமுமன்றொடியில்விண்ணவரும் வியப்பச்செய்தான். 22

ஓதரியதிருமன்றற்குரியவெலாமோதிமத்தின்பிடரியூரும், வேதனமைத்திடத்திருமால்விண்ணவர்தம்பெருமானைவியன்சீர்க் கோலங், காதலொடும்புனைந்திடுவானருகுறலுமவனருளிற்கவின்றயாவு, மேதமிலாற்கரியபொருளெதுகொலெனவயலிருந்தானினியவாற்றி. 23

இந்திரையுநான்மகளுமிமையவர்தமடந்தையருஞ்சசியுமெய்திச் சுந்தரியையடிதொழுதுத்தோயமதைநீராட்டத்துணிவார்போலச் செந்தமிழினியன்மேனிசிறந்தொளிரப்பலபணியுஞ்செறித்துவானிற், பைந்தருவிற்பெறுநுண்மைப்பவளநிறத்துகில்சாத்திப்பணிந்து சூழ்ந்தார். 24

வித்தகர்சூழ்ந்திசையெடுப்பவிழுத்தகுகூர்மாண்டார்விறலாடகேசனத்தமொருபதுநாறுலியமதிர்க்கும்வாணனொடுமவனோர்கம்பனெத்திசையிற்காவலருமினிநீண்டவெல்லவன்சென்றிவருமேடத்துத்திரஞ்சேர்திருநாளிலோரைதிதிமுதற்பிறவுமொருங்குகூட. 25

தாமரையோன்றழல்வினைசடனையியற்றத்தவளமணிமுறுவலாளைக், காமனைமுன்பொடித்தழித்தகண்ணுதலார்திருக்கரத்திற்கமழ்நீரோடு, மாமுனிவனிமையவர்கள்மருங்கொலிப்பமறையொலிப்ப வழங்கிமண்ணிற், றீமையறப்போந்தபயன்றெரிந்தனனென்றேம்பலினுட்டினைத்தான்மன்னே. 26

பல்லுயிருமுயிர்த்தருளும்பசுங்கொடியினொடுமேவிப்பரமனல்குஞ், சொல்லரியமணக்கோலமெதிர்நிறைஞ்சித்தூய்மையராய்த் தொகுதியாய, வெல்லவருமலர்முனிவன்றனைநிகாவாரிலையிலையென்றிசைத்துப்போற்றி, யல்லமருங்காந்தவனையருகடைந்துவணங்கிவிடையருள்கவென்று. 27

மாறிலான்றன்ளேடுமிடப்பாகத்தமர்ந்தமரகதத்தைத்தாழ்ந் து, பேறெலாமின்றடைந்தேம்பெருமவெனத்துதித்திடலும்பிறை சேர்மோலி, யாறுலாஞ்சடையவனுமங்கவர்க்குவிடையருளியருகி னிற்கும், வேறிலாமலர்முனிவன்முகநோக்கிவிருப்பினெடும்விளம் பலுற்றுன். 28

வேறு

நீயுமிக்கணத்திளேருநோர்ந்தவிப்படிவதீத்துத்
தூயநங்கயிலேயெய்தித்தொன்மையினமர்திரென்னுக்
காயனற்படையோன்செப்புங்கணத்தினிற்பழமையெய்தி
நாயகனருகுசார்ந்தார்நன்கிசைத்தமரர்வாழ்த்த 29

வேறு

பின்னரெம்பிரானந்தியைப்பெய்புனற்கொடியை
யின்னுமிவ்வுருவோடுநீர்சில்பகலிருத்தி
ரென்னினன்மைகளுலகினிற்கியைதருமிங்கன்
மன்னுநுங்கலேயொன்றினின்மகிழ்வினென்றிசைத்து. 30

கண்ணினுக்கரும்பொருளினேக்காட்டுசெங்கதிரி
னண்ணுமந்தரையாற்றினினடத்துறுங்கோவி
னெண்ணுமன்பினரெம்மடிநீழலேயெய்தப்
பண்ணுலாவியநுமையலாற்பகர்தரற்குளதோ. 31

ஆயதன்மையையுன்னியீங்கமர்குதிரென்னுந்
தூயவாசகஞ்சிரங்கொடுதாக்கினரிறைஞ்சி
மேயவோர்கலேயாலிவணின்றனர்விருப்பிற்
றுயனுனருளெய்தினர்க்கரிதெவன்சாற்றின். 32

இனேயர்செய்கையீதாகவெம்மிறைவனுருமையைப்
புனேயுநன்மணமுரைத்தனம்போற்றருநந்தி
தனேயடைந்தெழிற்சாஞுவன்றம்பிரானருள்சே
ரனேயகாதையுமியம்புவன்கேண்மினென்றறைவான். 33

திருமணப்படலம் முற்றிற்று,



## சாளுவப்படலம்.

நீளுவதறநெறியெங்குநீண்முகில்
மீளுவமாந்தர்தமென்கைபீகையால்
மூளுவமாதர்கண்மூரிவேற்றிறற்
சாளுவதேயமென்றுரையிற்சான்றதே. 1

செந்நெலங்கன்னலாய்க்கன்னறீங்குலை
துன்னியகதலியாய்க்கதலிச்சூழல்வான்
கன்னிவண்கமுகமாய்க்கமுகந்தாழையாய்
மன்னியமருதவைப்புடையமாண்பது. 2

நாடுவவயலெலாநண்ணுநாரைகண்
டோடுவமதகிடையொளிக்குநீள்கயற்
சாடுவவீழ்புனற்றகவிலார்களிற்
கூடுவகுலையெலாம்பணிலக்கூலமே. 3

நன்செயிற்றுளூறநான்றநெற்கதிர்
பொன்செயுநிலமெனப்பொலிந்துதோன்றிடு
மின்செயுமுடிவினம்விண்டவிர்ந்தெனக்
கொன்செயுநித்திலக்குப்பைநாறுமே. 4

தாழைவீழ்காயதுகமுகந்தாக்கிநீள்
வாழையங்குலையொடுவருக்கைமோதிமேல்
வீழிரதத்தொடும்விண்டதீங்கனி
வாழியபயிரெலாம்வளர்க்குமாண்பது. 5

வாவியுஞ்சோலையும்வரையுமாநெடு
காவியுங்கயலுநேர்கண்ணினார்கடம்
மாவியுமறிவுமாமன்பரோடுசீர்
மேவியவாடலின்மிடையுமாண்பது. 6

நீர்வளமதனினுநிலைமைகுன்றிடாப்
பார்வளமதனினும்பரந்தகல்வியிற்
றேர்வளமதனினுஞ்செல்வத்தாற்றினுஞ்
சீர்வளம்படைத்துநற்சிறப்பினோங்குமால். 7

நால்வகைவருணமுநவின்றபேதமு
நூல்வழிமுறையினினுவன்றவவ்வவர்
பால்வழியாந்தொழில்பயின்றுவைகுறக்
கோல்வழியரசுறுங்கொற்றவேந்தனே. 8

முன்னியமனுநெறிமுறைதிறம்பிடாக்
கொன்னவில்வேலுடைக்குரிசில்பற்பல
மன்னவர்தன்னடிமருவியேத்திடத்
தன்னரசுரிமையிற்சார்ந்துவைகினான். 9

தஞ்சமாய்மன்னுயிர்தாங்கிவன்புரி
விஞ்சுமாதவமெனும்விதைமுளைத்தெனச்
செஞ்சுவையூறல்வாய்ச்செம்மலர்க்கர
மஞ்சனாயம்மணிமானுதித்தனன். 10

வேறு.

சேயிளையரசனெம்பிரான்கயிலைச்சிவகணமென்றுளத்துணரா
ணையினுங்குறியாலுருவினாலெந்தைக்கடியனென்றான்றவருரைப்ப
மீயெழுமுவகைக்கடலிடைக்குளித்துவிழுமறைவிதியினியற்றுந்
தூயதாம்வினைகள்மரபுளியாற்றித்தோன்றலைவளர்த்தனன்தொல்
(லோன் 11

குதலைமென்மொழியாளொருபுடைக்குலவுங்குழகனார்மெய்யடி
ப்பத்தி, நுதலுபேரறிவுங்கருணையும்பொறையுநோன்றகையிவனொ
டுஞ்செழிப்ப, மதலையம்பருவமொன்பதுங்கடந்துமாசறுங்கலைமு
ழுதுணர்ந்து, திதலைமென்னகிலார்மயலுறத்திரடோட்செவ்விவங்
தடுத்தனன்செம்மல், 12

காதைகண்டுவந்துமந்திரத்தலைவர்தம்மொடுமளவளாய்த்தரணி
மாதினைச்செயிரில்மங்கலநாளின்மணிமுடியதனொடுமளிப்பக் (ன்
கோதறுந்தொல்சீர்க்குடிவருமுறையாற்கோமகன்சாளுவவேந்தெ
றேதிடயாருமரசுசெய்தினிதினொருகுடைநீழலினிருந்தான். 13

அருந்தவர்க்கிடுக்கண்புரிதருவக்கிராசுரனென்னுமோரவுணன்,
பொருந்துதன்றேயத்தருகுறைந்தனனென்றொற்றினர்புகலுரை கே
ட்டுத், திருந்துதன்பதியினமைச்சரையிறுவித்திரளுநாற்படைகளு
ந்துடாரப், பருந்துகண்டுவக்குமுக்கிரக்கதிர்வேற்பார்த்திவன்றேர்
மிசைப்படர்ந்தான். 14

கானமுமலையுங்கண்டுகண்டசுரற்காண்கிலாதாங்கவற்றுருவி
மானவேலரசனெய்திடுபோழ்தின்மாமலர்த்திரணறைசொரியுய்
யானமும்பொழிலுமிருபுடைசெறிந்துயாணர்மிக்கிலகியபுட்ப
வானதித்துறைகண்டன்புளமீர்ப்பவன்பெரும்படையொடுமிறுத்
தான். 15

அன்னசாலையிலில்மகதியாழ்முனிவனுயிடையடைதர நோக்கி
யென்னமாதவமுன்பியற்றினனீயிங்கெதிர்வரற்கென்றடியிறைஞ்சு
மன்னவற்காசியெண்ணிலவழங்கிமற்றவனுரிமையினளித்த
பொன்னினுதனத்தினமர்ந்தபின்பிவணிபோந்தமையருள்கவென்றி
(சைப்ப. 16

மெய்தருஞ்சிறப்பிற்சாளுவநீயிவ்வேனமாநதியினீள்கரையின்
மைதருங்கண்டர்மலரடிப்பூசைமரபினிலாற்றியோர்வருட
முய்தரவிருத்தியாயிடினல்லாலோதியவக்கிரன்றன்னைக்
கொய்தரலரிதாலென்றவனுற்றலனைத்தையுங்கூறினனகன்றான். 17

வேயிடைக்கவர்தோள்விளங்கிழைபாகன்வேண்டிவந்தருள்புரி
யுமையருந், சேயிடையன்றிச்சேர்ந்தவப்பொருட்டாற்செய்யகோற்
சாளுவன்படையோ, டாயிடைச்சின்னாள்முனிமொழிகருதியமர்
ந்தருமேல்வையோர்வைகல், தூயவச்சோலைப்புறத்துவானதியின்
றுறைவழியேகினன்றுருவி. 18

வேறு

வேட்டமுள்ளம்விழைந்துசெல்கின்றவத்
தோட்டலர்ந்ததொடைகமழ்மார்பினன்
பூட்டுமுன்னைப்புணர்ப்புறத்தன்னிரு
நாட்டமுன்னரெதிர்ந்தனனோர்நவம். 19

கேழல்வானதியின்கரையிற்கிளர்ந்
தேழுவாம்பரியோன்றனிருக்கையிற்
சூழநாற்புறமுஞ்சுடர்வீசிட
வாழுமண்ணில்வளர்ந்தவன்மீகமே. 20

மன்னுமாநதியிற்படிந்தாடியப்
பொன்னலர்ந்தபொலிவுடைப்புற்றதின்
முன்னடைந்துமுழக்கிமுதிர்குரல்
மன்னுபூவினிறைஞ்சிவலங்கொடு. 21

கண்ணிரண்டுங்கதுவிடவார்புன
லுண்ணயப்பினுருகிமுகந்துழை
நண்ணுமோர்மழவெள்விடைநம்மிறை
யண்ணலேற்றினமர்ந்ததிறத்தையும். 22

ஆசிலும்பரமர்ந்தவுறுப்பென
றேசினாற்றெரிவித்திடமேனிதா
னேசமோடுநெருங்கிநிமிர்ந்தெம
தீசன்வாழவிலகியபுற்றினை. 23

உற்றவவ்விடைக்கன்றொடுவந்துறீஇ
முற்றுபூசனையன்பின்முடித்தொரு
பெற்றம்வார்மடியிற்பெருகும்பயம்
புற்றின்மீதுகசிந்துபொழிவதும். 24

கண்டுமன்னன்கருத்தினயிர்த்திதி
னுண்டொருண்மையுணர்குதும்பின்பெனாக்
கொண்டுநீங்கிக்குறுகினன்றானமர்
புண்டரீகத்தடம்புடைசூழ்பொழில் 25

முற்றுதிங்களோர்மூன்றளவுமுன
முற்றவண்ணமுறுவஃதுணர்ந்துதன்
கொற்றவீரர்குழுவிற்சிலர்தமை
மற்றவுண்மையறிந்துவருத்திட. 26

ஏவினனவ்விருந்திறலாளர்கள்
மாவினுருமலர்த்தவிசாருமெய்
பூவினாத்தொழத்தகும்புற்றயல்
மேவினார்கள்விளைவுணர்வேட்கையால். 27

மேருவின்குவடென்னமிளிர்ந்துவிண்
சாருமங்கதன்மாடுதனதொளி
வாரியின்பவளச்செழுவண்ணமாய்
வீரமோடொருவேடுவனின்றனன். 28

கல்லினாற்றல்கடிந்தகவின்புய
மல்லினாற்றன்மலர்க்கரமேந்திய
வில்லினாற்றல்விளக்கிடவாண்முகஞ்
சொல்லினாற்றற்கருஞ்சுடரோனென. 29

நின்றவற்கயல்சென்றுநெருங்கினார்
சென்றவீரரைநோக்கிச்சிறுநகை
மன்றவாயிற்றுளக்கிமணிமுடி
நன்றுநன்றுநடந்தெமையிங்கெனா. 30

புக்குநீவிர்புகத்தகுஞ்சார்பிதன்
றிக்கணத்தினிலேகுதிரன்றெனிற்
றக்கதல்லதுறுமெனச்சாற்றலு
மிக்கசீற்றம்விளைந்துவெகுண்டனர். 31

வேறு

ஏயநஞ்சாளுவவிறைவனேவலான்
மேயினமெவரெமைவிலக்குமாற்றலர்
தீயவவென்றெதிருறுத்துச்செய்யவேற்
காயெரிப்படைபலகனன்றுவீசினார். 32

வேறு

காவலன்றனதேவலர்கனன்றுளம்விடுத்த
தூவழற்சிகையார்மழுத்தோமரமீட்டி
யாவுமிற்றிடையழிதரவெயினனையெதிர்ந்த
தேவதேவனுஞ்சிலையினாணேற்றினன்றிகைப்ப. 33

பாரவில்லினைவாங்கினன்பருவலித்தோளாற்
சாருமம்புறுதூணியிற்சரமெனுங்கால
மாரியெண்ணிலவித்தினன்மன்னவனாணை
வீரரங்கையிற்பல்படையற்றனர்வீழ்ந்தார். 34

மெய்சிதைந்தனரறிவையுமிழந்தனர்வீரக்
கைசிதைந்தனர்கதமொழியிழந்தனர்கழியா
மைசிதைந்திடவெதிர்வருமாயவேட்டுவனார்
வைசிதைந்திடாவடிக்கணைவருதலுமாழ்கி. 35

இன்னவாறிவரவசமுற்றயர்ந்தமையெல்லா
மன்னன்மாடுசென்றுரைத்தனன்மற்றிவர்தம்முட்
பின்னிருந்தவனொருவனெம்பெருமவென்றிறைஞ்சி
முன்னிருந்தவவ்வியப்பினமூண்டுளத்தெழுந்தான். 36

யானைவாம்பரியிரதமாட்படையெனவழங்குஞ்
சேனையாவையுமுந்துறவமர்பொரச்சென்மின்
யானுமெய்தினனெய்தினனென்றலுஞ்சூதன்
வானளாவியவிவுளியந்தேரொடும்வந்தான். 37

கண்ணிமைக்குமுன்பாகனேர்கடவினனுய்த்த
விண்ணிமைக்குறுமிரதமேல்வெஞ்சமர்க்கோலம்
பண்ணிமைக்களன்சேவடிமனதினிற்பணியா
நண்ணிமற்றதினேறினன்விரைவினினடந்தான். 38

காந்துசீற்றமுமையமுமெதிரெதிர்கலப்பப்
போந்துகாவலனிரதமேற்புற்றயலடைந்து
சாந்தனைக்குரியாரெனத்தரைமிசைக்கிடந்த
மாந்தர்தம்மையுங்கானவர்மன்னையுங்கண்டான். 39

வேறு

பொற்புற்றினையெதிர்சென்றமர்பொரலுற்றிடுமரசன்
முற்பற்றியவனிகங்களுமுடுகிப்புடைவளையா
விற்பற்றினர்வேல்பற்றினர்வாள்பற்றினர்விரியா
மற்பற்றினர்சிலர்பற்பலவகையுற்றனர்மறுக. 40

திருவேடுவனுருவங்கணமழையிற்றெரிவரிதாய்ப்
பொருவாகையர்திறல்கண்டெதிர்புளிஞன்னகைபுரியா
வொருவாளியினவையாவையுமொழிவித்துழல்வாரும்
வெருவாவயலிரிவுற்றிடவிளையாடினனின்றான். 41

ஒட்டார்புரமழிவுற்றிடவொருவன்குறுநகையாற்
சுட்டாலெனவொருவெங்கணைபலவாய்த்துடர்குதலும்
பட்டாருணர்வற்றாரகல்வுற்றாரமர்நீதி
விட்டார்சிலர்சிலர்சோரியின்வெள்ளம்பெருகிடவே. 42

தஞ்சேனைகள்பலவும்படவொருவன்றனிநின்று
னஞ்சாதொருகோலேவினனன்றேயெனநகைசெய்
தெஞ்சாவெனதிருதோள்வலியினிதென்றெதிர்கடவிப்
பஞ்சானனமெனலாமுனிவினனுய்ச்சிலபகர்வான். 43

யாதூர்பெயர்வினையாதிவணெய்துந்திறலினரின்
மீதாரமரென்கொல்புரிகுற்றாய்விதிவலியால்
பேதாயெனவினவாவதுபெயராவலியினனும்
வேதாமுனமறியாதுயர்விகிர்தன்செவியுணரா. 44

பேதுற்றிடுமதியாலிதுபேசிக்களிகொளலா
லேதுற்றிடுகஞ்சூழலினெவரும்புகுகிற்பிற்
கோதுற்றிடுமெனல்கொள்கிலர்குறுகுற்றனரிளையோர்
வாதுற்றனர்தீதுற்றனர்வறிதுற்றனைநீயும். 45

நில்லாதிவணகனியிதுநேடற்குரியதுவன்
றெல்லாதுறுநெறியேகுதிரெனவேபுலைமெழுகின்
வல்லானுமுள்மறுகிச்சினம்வளர்வுற்றெழவங்கை
வில்லானதையேறிட்டனன்விண்ணுடருமுலைய. 46

சொற்கொண்டெவராலும்புகழரியான்சுடருருவிற்
கற்கொண்டலினெடுமாரியினளவில்கணைபொழியா
வெற்கொண்டதொரிருளென்னவுமிணையில்லதொருருவை
முற்கண்டதொர்பவமென்னவுமுரணுற்றனவருகின். 47

மெய்யன்பினர்க்கல்வில்லடிமேவுமியல்புடைய
வையன்கணையவையும்புனைமலரின்னணிதரலு
மெய்யுஞ்சரமுழுதும்வடிவினிலுற்றியல்வரிதாய்
வையந்தனில்விழலுற்றனவயவன்மனமுளைய. 48

மாயம்பலவல்லானிவனென்றுள்ளகமறியாக்
காயும்பலவனலின்கணைவிடலும்துகருதித்
தோயுங்குறுநகைகொண்டெதிர்தொடுவெஞ்சிலைவளைவித்
தாயுந்தொடைசிலவெய்த்தமர்விளைவித்தனனண்ணல். 49

அன்பன்சிலையினிலுந்தியவளவில்சரமுழுது
முன்பன்படிவிழநூறியுமுடுகுங்கொடிபரிதேர்
வன்பின்னொருகோலேவினன்வருநுண்பொடிசெயலுந்
துன்பின்னிறையயனின்றதொர்தேரிற்றுடர்வுற்றான். 50

அத்தேரையுமழிவித்தவனனிகங்கரிபரிதேர்
கொத்தாயினமுழுதும்படிகுவியப்பலதுணியாய்ப்
பத்தாயினகணையெய்தின்னதுகண்டுயிர்பதறு
வெத்தேவருமயரச்சரமெண்ணில்லனவெய்தான். 51

வேறு

மன்னுந்தியவாசுகமாரியெலா
முன்னம்படநூறிமுனிந்தனையோன்
றன்னங்கமறைந்துதளர்ந்திடுமா
றுன்னிச்சிலவெஞ்சரமுய்த்தனனால். 52

அம்பின்குலமேனியழுந்துதலுஞ்
செம்பின்னயனங்கள்சிவந்துகையின்
வெம்புமழுவாள்பலவீசினனற்
றம்பந்தமறுத்திடுதாளினன்மேல். 53

எறிதந்தபடைக்கலமிற்றுகவோர்
பொறிதந்தவடிக்கணைபோக்கியவ
னெறிதந்தவுரந்தனினேர்படவே
குறிதந்தனனைந்துகுயிற்றினனால். 54

ஐந்தாசுகமார்பினழுந்துதலு
னைந்தானுணர்வற்றுநலங்கியிறை
யுய்ந்தான்விரைவுற்றெதிரோடியவ
னந்தாமரையங்கைகள்பற்றினனே. 55

வேறு

மற்றுமிவ்வரையனைப்படிதலைப்படவிசைத்
தெற்றலுமீட்டும்வந்தெயினன்மார்பினிலுறக்
குற்றினன்முட்டியிற்கொடுமையுற்றிலனவன்
சுற்றினன்குரிசிலைவிரலினிற்றுயருற. 56

தோளினுந்தோளினுந்துணைமணிக்கழல்புனை
தாளினுந்தாளினுந்தாவில்பல்லுலகெலா
மாளினுமாளுமென்றுலையவிம்மற்சமர்
கோளிலிங்கிருவருங்குலைவறப்பொருதனர். 57

இன்னணம்பொருதுழிக்கதிரவனிவர்தமுண்
முன்னுமிச்சமரமென்முறைகொலன்றியுமெதிர்
பின்னுநானிற்பதும்பிழையெனப்பெயர்தல்போற்
றுன்னுவெங்கடலிடைத்துரிசினிற்றோய்ந்தனன் 58

தினகரன்கனைகடற்புகுதலுஞ்சமர்செயும்
வனசரன்கருணையால்வள்ளல்முன்றுண்ணெனப்
புனையுருக்கரவினிற்போயினன்புரவல
னினைவதற்கருமையாய்நின்றனன்றனிமையின். 59

சுற்றிலெங்கணுமவன்சுடருருத்தோன்றிடா
துற்றவப்புதுமைகண்டுள்ளநொந்துணர்வொணாப்
பெற்றியாற்சினமொடும்பேதுறுந்தகையனாய்
முற்றுதன்சூழலிற்செல்லுவான்முன்னினான். 60

ஆவியற்கஞ்சிமுன்னாண்மைவிட்டோடிய
மாவியற்படைஞருமறநெடுங்கணையுர
மேவியுள்ளுணர்விழந்தவர்களுமின்னுவேற்
றோவினைக்குறுகியுற்றறிதினிற்கூடினார். 61

பகலிடைச்சமரினிற்பட்டவெந்துயரெலா
மகலவுற்றயர்வுயிர்த்தண்ணல்கண்டுயிலகன்
றிகலுமுட்கவலையாலின்னநெஞ்சுடையனாய்ப்
புகலுமக்கங்குலின்பொழுதினைப்போக்கினான். 62

மாதவம்பெறுதியால்மன்னவின்றெழுகென
வோதல்போற்குக்கிடக்குலமெலாமொலிசெயத்
தாதவிழ்தொடையினான்சயனம்விட்டனனருட்
டீதறச்சிந்தையுட்டேறியேறிருவுற. 63

வேட்டுவக்கோலமோடெய்துறும்விமலன்முன்
னாட்டமுஞ்சடையுமெண்டோளுநாமுந்தவ
மீட்டலிற்காணலாமின்றெனுமேம்பலிற்
பூட்டினான்விரைவினிற்புரவியேழிரவியும். 64

காலையின்கடனெலாமாற்றினன்காதலிற்
பாலலோசனனடிப்பரவினன்பான்மையா
லேலுநற்படைஞரோடெய்தினனிகல்செயுங்
கோலமார்தருமணிப்புற்றயற்குறுகினான், 65

உற்றகாலையிலவனொளிர்சிலைக்கையனாய்
வெற்றிவேடுவனெதிர்வீரமுட்கண்டயிர்த்
திற்றுறச்செய்கிலாதேகலன்யானெனாக்
கொற்றவார்சிலையினைக்கோட்டினன்கோமகன். 66

நென்னலிற்கண்படாநீர்மையன்றன்னைநேர்
முன்னலாலுற்றவெம்முனிவொடும்பல்கணை
பன்னெடுந்தொகையவாயேவலும்பாதியிற்
பின்னமுற்றிடநகைத்தெயினனும்பெய்தனன். 67

மீண்டுமப்புரவலன்விழியெதிர்ப்படமறைந்
தேண்டருமுக்கணோடிறையினிற்றோன்றிநின்
றாண்டகைக்கெண்ணிலாவதிசயம்விளைதர
மாண்டவப்படிவமுமறைதரச்செய்தனன். 68

கன்னலுட்டிருமுகநூறொடுங்கண்ணெதிர்
பின்னருமெய்தினன்றுணைவினிற்பேணிய
வன்னசீருருவமுமாறினனன்பினான்
மன்னவன்றீமையிற்றேர்கிலன்மாழ்கினான். 69

மாயமாம்வனசரன்மற்றுமுத்தலனிடை
யாயிரமுகமொடுமருளியுமலகிலா
வாயிரமுகமொடுமளவினனாதவிர்ந்
தேயெனுமுனமவன்பழமையினெய்தினான். 70

வேறு

காணவனுருவினின்றகருணையனயல்வாழ்புற்றுட்
கோனவன்காணவெய்திக்குளித்தனன்றனதுமேனி
வானவர்மலர்மென்மாரிவழங்கினருமைசாபத்தால்
மானமுஞ்சீற்றந்தானும்வளர்ந்திடமதித்திலானாய். 71

அங்கையின்வாளொன்றேந்தியவண்விரைந்தோடிச்செம்பொற்
றுங்கவன்மீகநெற்றிதுகள்படப்போழ்ந்தகாலை
தங்கியவளியர்தம்பாலெளியனுந்தகைமைகாட்டப்
பொங்கியசோரிவெள்ளம்பொடித்துமீக்கிளர்ந்ததன்றே. 72

அப்பகலுடங்கியங்கண்மறிக்குமாருயிர்கட்கெல்லாஞ்
செப்புறுங்கபாலமோக்கஞ்சிதைவறவெய்துமன்றி
யப்பொழுதினுமவ்வீசனிலிங்கத்தின்முடிமேற்பட்ட
அப்புடைவயிரவாளின்றழல்வடுத்தோன்றுமம்ம; 73

அன்னதுகண்டமன்னனுகுலத்தழுங்கிச்சற்று
முன்னையவறிவுகூடிமுதல்வியைத்துதித்தல்செய்யி
னென்னிடர்தீருமென்றுவெழுந்தபேரன்பினோடுங்
கன்னியாயனைத்துந்தந்தகவுரியைப்போற்றல்செய்தான். 74

போற்றலுமிலங்கியெல்லாப்புவனமும்பிறவுமாய
கோற்றொடியமரர்மாதரிருபுடைகுலவிவாழ்த்த
மாற்றுயர்பசும்பொற்கொம்பின்மணியிடையசைந்துவாட
வேற்றபல்கணங்கள்சூழவெளியினிற்காட்சிதந்தாள். 75

கவுரியைக்காண்டலோடுங்கணிப்பருமுவகையென்னு
முவரியிற்குளித்துச்செந்நாக்குழறிடவுடல்பொடிப்ப
வவிழ்தரப்புனல்கண்சிந்தியடியனேனுய்ந்தேனுய்ந்தே
னெனவெனைப்பொருவர்மண்ணிலென்றடியிறைஞ்சிமீட்டும். 76

இச்சையினெழுவாய்போற்றியெவற்றிற்குமிறைவிபோற்றி
யெச்சவெம்பிறவிநோயையிரித்தருள்புரிவாய்போற்றி
நச்சியவுலகிற்கெல்லாநாயகிபோற்றிபோற்றி
அச்சமேலம்பிழைகள்யாவுந்துலைக்கருள்புரிவாய்போற்றி. 77

அனைத்துலகங்களாகியவற்றினுக்கனையுமாகிக்
சனைத்துவண்டிமிருங்கூந்தற்கன்னியுமாகியன்பர்
மனத்துவந்துதவியாளுமலையருள்புதல்வியாய
நினைச்சரணடைந்துநின்றேனின்மலைபோற்றிபோற்றி. 78

என்றுரைபலவுங்கூறியிறைஞ்சியவிறையைநோக்கி
நன்றுவந்தனமாலுள்ளநயந்தமைநவில்தியென்னப்
பொன்றிகழொளிகால்புற்றிற்போந்தமையனைத்துங்கூறி
யின்றெதிர்தலைவற்காணவருள்தியென்றிரந்துநின்றான். 79

அன்பநின்பிழைபொறுத்தேமசுரனைக்கோறலுன்றன்
வன்பினிலமையாதாகும்வரதனேயவனைப்பின்பு
துன்பறமுடிக்குநீநந்துணைவனைக்காண்டற்குள்ள
மின்புறினிதனையாய்கவெளிவருமெளிதினென்றாள். 80

பாகனமொழியாள்மாற்றம்பணிந்தனனேற்றவண்ணம்
நாகினையாயவங்கணகைமணியிலிங்கமேனி
மீகிளரமைதிநோக்கிவியப்புடன்வெருவலுற்று
ஆகொடியேனென்செய்வேனாற்றியதீமைக்கென்னா. 81

தாயெனுங்கருணையாலித்தமியனுக்கிரங்காயென்னி
னாயெனத்தகையேற்குய்யுநலமெவனுளதாநின்றன்
மாயையிற்கிடந்துமாழ்குமரபினேனன்றியுண்மை
யாயினவுணர்த்தினல்லாலுணர்வனோவடியனென்றான். 82

வேறு

மூளுமன்பின்முதிர்ந்தவுளத்தனாய்ச்
சாளுவன்றுதிசாற்றவிரங்கியே
வேளவிந்தவிழியுறுநெற்றியா
னாளவந்தனனங்கவன்முன்னரின். 83

பச்சைமேனிப்பனிவரைப்பாவையா
ணச்சிவாழவிடத்தினரைவிடை
யுச்சியேறியுறுகணநாதரும்
வச்சிரத்தனும்வானவர்சூழலும். 84

பாணியைந்துபடையினன்பார்ப்பனன்
வீணைநாரதரும்வினையொன்றிலாச்
சேணிலாயமுனிவருஞ்சேர்வுற
வேணியானெதிர்போதலும்வேந்தனும். 85

என்னமாதவமாற்றினனெந்தைநீ
முன்னமெய்திடவென்றுமுகிழ்த்தகை
சென்னியேறத்திருமுனம்வீழ்ந்தனன்
கன்னிபாகனுமுள்ளக்கருணையால். 86

தீதியாவும்பொறுத்தனஞ்செய்பவெம்
பாதிமாதுள்ளிரங்கியபண்பினாற்
போதினுக்கும்புனிதநதியிதன்
மீதினிற்சிலவாண்டுகண்மேவிநீ. 87

பற்றகற்றுந்திருப்பணிபற்பல
வுற்றியற்றியுவந்திசைகொண்டுபின்
செற்றமின்னின்பதவியைச்சேர்கெனா
முற்றயாவுமொழிந்தனன்முன்னவன். 88

சேயுருக்கொள்சிலாதரன்செம்மலு
நாயகன்றனகைமலர்ச்சேவடி
மேயவன்பிற்பணிதலுமேலவ
னீயுமுன்றனிலைபெறுகென்றனன். 89

அன்னகூறுமமலனைப்போற்றியே
யின்னநற்றலமோடிவிலிங்கமு
மன்னுமென்பெயரோடுவழங்குமா
றின்னருள்செயவேண்டுவலென்றலும். 90

ஆகவென்றங்கருளியபெருமும்
வேகநீர்மகடன்னையும்வேண்டுவ
தோகையாதுவிளம்பெனச்சொற்றலு
மேகநாயகன்றன்னருளேத்தியே. 91

யாறிதன்கணியைந்தவெனதொரு
கூறினென்னைநிகர்ப்பவுங்கோதிலாண்
டாறிரண்டினொருமுறையண்மியா
னூழுவெள்ளப்பெருக்கொடுமுற்றிதின். 92

புற்றெழுந்துபொலியுநின்மேனியை
யெற்றும்வார்கரத்தீம்புனலாட்டவு
மற்றெனக்குவரந்தருவாயெனக்
கற்றையஞ்சடைநல்கிக்கழறுவான். 93

காரணாதியர்நற்றவர்தம்முகங்
காரணாதியனோக்கியிக்காய்விடை
பேரினுமிப்பெருந்தலமூன்றினும்
வாரணாசியையொப்பதுவாய்மையே. 94

திருத்தமிங்கிதிற்கங்கைசெறிந்துமுன்
பரித்தசாபமகற்றியபண்பெனிற்
பொருத்தவேறுபுகல்வதுந்தீதெனா
நிருத்தவேதியன்பின்னுநிகழ்த்துவான். 95

இங்கினீர்மகடன்னையுள்ளேம்பலாற்
றங்கவெஞ்சிரமீதுதரித்தலாற்
சங்கரர்பரணியெனச்சாற்றொரு
துங்கநாமமுந்தோற்றுமுலகினில். 96

நங்கணங்களுநாயகநந்தியுங்
கங்கையும்பெறுசாபங்கழுவிய
திங்கெனிற்றலம்வேறிணையின்மையை
யங்கைநெல்லிக்கனியினறிதியால். 97

அன்பர்தம்மிலருள்செயவாயிரந்
தன்பினாலிரண்டாயதலங்களும்
பின்பினெய்திப்பெறும்பயன்யாவையு
மின்பினின்றிவ்விலிங்கத்தினீங்கிட. 98

இச்சையாலிங்கெழுந்தனமாதவீ
ணிச்சயம்பிறநேர்வரிதாயமை
யிச்சிலாதரனேந்தலீறைஞ்சலாற்
றுச்சிலாகியிப்புற்றினுட்டுன்னலால். 99

வாகையாரிடபேசனெனவும்வன்
மீகநாதனெனவும்விளம்புவ
ராகையாலித்தலத்தினுக்கப்பெய
ரோகையோடுமுரைக்குமுலகெலாம். 100

அன்றியுமெமதாகமுறைந்தவிம்
மன்றலங்குழன்மாதினையன்பர்செய்
பொன்றரும்பிழையாவும்பொறுத்தரு
ணன்றியைந்துநலம்பலநல்கலால். 101

மாணுமங்கலேயென்றும்வழங்குகல்
யாணியென்றுமிசைப்பரிவளருள்
பூணில்யாவும்பொருந்துவரென்பதைக்
காணுகிற்குக்கழறுவதென்கொலோ. 102

வேறு

முத்தமுமணியுங்கவரியுமகிலுமுதிர்திரைக்கரத்திருகரையும்
பத்தியினிரைத்துப்படிந்தவரெழுமைப்பாதகங்சமூவுறுமேன [ச்கு
வித்தகந்தியிற்குளித்துமங்கலேயோடெமைத்தொழவிரும்பினு மவர்
முத்தியிற்சிறந்ததிலேயிணேமொழிதற்கென்றனன்முழுதுமா முனேவ
[ன். 103

வேறு

கருவாழ்வறமாவிடபேசர்கனிந்துரைத்த
திருவாய்மொழிமான்முதலாகியதேவர்கேட்டுத்
தருவேரறமண்ணில்விழுந்தெனத்தாழ்ந்துமண்ணி
லருவாவிழியும்புனலாற்றினமூந்தினுரால். 104

எந்தாய்சரணஞ்சரணம்மெமதின்னறீர்க்குஞ்
செந்தாமரையேயுனதாடலேச்செப்பினல்லா
லுய்ந்தாரருளெங்ஙனமெய்துவதும்பவென்ருக்
கொந்தார்குழலாளேயுமேத்திசைகூறினுரால். 105

இவ்வாறெவருந்தொழூமவ்விடையெய்திரீர்மா
னவ்வானுருநீக்கினளஞ்சடையுட்கரந்தா
ளொவ்வாதுயர்நந்தியுமுன்னிலேயுற்றுவந்தான்
செவ்வேசுரரைந்தருவின்மலர்சிந்தினுரால். 106

செங்கட்டிருமாலயனுதிநற்றேவர்யாருந்
தங்கட்கினிதாயவருச்சனேதாழ்ந்தியற்றி
திங்கட்சடையோனருள்கொண்டெழிற்சேணடைந்தா
ரெங்கட்கிறைதானுமறைந்தனனியாவரோடும். 107

தண்டார்புரளும்புயச்சாளுவன்ருனுமின்ன
கண்டான்புளகுற்றனன்கண்கள்பொழிந்திடக்கா
ருண்டாயவியப்பினிலொன்றுமுணர்ந்திலானுய்ப்
பண்டாயபரஞ்சுடர்தன்னருள்பாடிவாழ்த்தி. 108

வேறு

அல்லிருக்குங்களாறடையான்றனக்கிசைத்தவப்பணியையகத்
திற்கொண்டு, மெல்லிருக்குமணிமௌலிச்சாளுவனுமேனைத்திக்க
வரையின்கீழ்பா, னல்லிருக்கைவளம்பதியொன்றினிதமைத்தங்கதின்
மேவிநம்பனார்க்குச், செல்லிருக்கும்வளம்புரிசைச்சினகரமண்டப
முதலாய்ச்செப்பும்யாவும். 109

நீதகனுநன்னெறிற்றிருவாளருமோரைதன்னைத்தெரிந்துகண்டு
மேதகுநற்கருப்பவறைமிளிருமகாமண்டபமும்விரும்புபச்சை
மாதினுக்குங்கரிமுகற்குமயிலவற்கும்பரிவாரமற்றுளோர்க்கு
மோதியவவ்வாகமத்திலுரைத்தவழிச்சினகரங்களுமாற்றியங்கண்.

எல்லாரியவகைமையினலேயவர்க்குமெழிற்படிவமியற்றிப்பின்னுந்
தெள்ளருபுனற்றடங்கூபந்தேவர்பிரான்றிருமுடியிற்சேர்த்தற்காகுங்
கள்ளவிழுமலர்நிறையுமுய்யானமுதற்பலவுங்கவினவாற்றி
வெள்ளமுடித்தவர்க்கினிதாந்திருவிழவாதியமுறையின் விளங்கச்
[செய்தான். 111

இப்பரிசினிடபேசன்றிருவடிக்கணெழுந்தபெருங்காதலாற்றி
னொப்பரியசிவபணிகளுடனுயிராதியவாலுமொருங்கேயாற்றி
யப்பரமனருகடைந்தான்கணத்திறையாயாண்டுசிலவவிலென்னச்
செப்பியவத்தவச்சூதன்றனைப்புகழ்ந்துமுனிவரெலாந்தெரிக்கலுற்
[றார். 112

வேறு

மணிமானெய்தியருளடைந்தமரபையருளினுணர்ந்துளத்திற்
றணியாக்காதறழைத்தனமத்தகையாரிடபபுரிப்பெருமா
னணியாயியற்றுமாடல்பிறவுளதேலருள்தியையவெனப் [ன்.
பணிமாதவர்தமுகநோக்கியுரைப்பானனைத்துமபசுத்துணர்ந்தோ

சாளுவப்படலம் முற்றிற்று.



## சோழன் பூசித்தபடலம்.

ஈடினற்றவவாழ்க்கையீரெம்பிரான்கணத்துட்
பீடுசால்மணிமானிவன்பிஞ்ஞகனருளா
னீடுமாண்டுகளாயிரநின்றுமானிடனு
யாடலார்புரமட்டவர்க்காட்செயுந்தகையால். 1

இத்தலத்தரன்றன்பணியெட்டுணையெனினுஞ்
சித்தமொத்துநின்றியற்றுனர்தேவரார்மகுடப்
பத்தியுற்றொளிர்செய்யதாட்பண்பினராகி
நித்தனுற்றவவ்வுலகிடைநிற்பராலென்றும். 2

மன்னுமித்தலத்தெம்பிரான்மாறிலாவன்பர்
தன்னடித்தலஞ்சார்தரத்தாங்குபேரருளாற்
பின்னரெய்தியவைகல்களொன்றினிற்பீடார்
சென்னிதன்றிறத்தெய்தியவாடலுந்தெரிப்பாம். 3

வேறு

பூவிரியுலகந்தந்தநான்முகப்போதினோன்செந்
நாவிரியணங்குமன்னுநலம்பெறுமலகிலாத
பாவிரிபுலவராலும்பகர்வரும்பயத்ததாகுங்
காவிரிபுலவுநாட்டைப்பேதையேன்கணிக்கற்பாற்றோ. 4

அத்திருநாட்டினின்றுமுறைசெயுமளவிலாத
மத்தவெங்கயமாவேந்தர்மரபினிலுதித்தோர்சென்னி
கத்திகைக்குழலோர்பாகன்றிருவடிகருத்தினீங்காப்
பத்தியினோடுஞ்செங்கோல்பழமையிற்புரக்குநாளில். 5

தென்றிசையிலங்கைவேந்தன்செருக்கினையமரிற்செற்ற
வென்றியகுரிசிறன்னைச்சார்ந்தவெம்பாவந்தீர
முன்றொழுமிராமநாதலிங்கத்தின்முடிமேற்கங்கை
துன்றியபயங்கொண்டாட்டித்தொழும்விருப்புடையனானான். 6

மந்திரர்தம்மைக்கூவிமணிமுடிச்சென்னிவேந்த
னிந்தையின்றுயர்ந்துவேதநெறிவழுவாதநீர்மை
யந்தணர்த்தெரிந்திங்கோர்பானுயிரரமைமினென்னத்
தந்தனரவைமுனன்னூரத்தொகைத்தகுதியோரை. 7

கண்டெதிரிறைஞ்சிப்பொன்னங்கமலனையனையார்தம்வாய்ப்
பண்டருமாசியேற்றுப்பனவரைநோக்கிநீவி
ரண்டர்கள்சூழ்ந்துபோற்றுமவிமுத்தநகரையண்மி
யெண்டிசைபுகழுங்கங்கையீர்ம்புனற்கடத்துட்கொண்டு. 8

பழிதபுமிராமலிங்கப்பண்ணவன்முடிமேலாட்டித்
தொழுதருமாவலுள்ளேன்றூய்மையினோடுநீவிர்
சுழிதருங்கங்கைநீத்தந்தூயபொற்குடத்துட்டாங்கி
யெழுபலபவமுமாயவெய்துமினென்றிசைத்தான். 9

பூசுரரதனைக்கேளாவன்னதேபுரிதுமென்னப்
பேசினர்விடைகொண்டேகிப்பெருஞ்சுரமலைவனங்க
ளாசறுநகரியெண்ணிலாற்றினிற்கடந்துபின்னர்க்
காசியம்பதியினெல்லைகண்டனரிறைஞ்சிக்கண்கள். 10

வேறு

விழுத்தகுவேதநான்முடியதுவும்வெள்ளிவேதண்டமும்வேட்கை
பழுத்தமெய்யடியருள்ளமுந்தவளப்பாய்விடையெருத்தமுங்கரப்ப
முழுத்தவைம்பூதம்படைக்குமுன்னாளின்முகிழ்முலைத்துணைவியோ
டிருப்ப, வழுத்துமெம்பெருமானமைத்தபஞ்சணையாம்வான்பதிப்
பெருமையார்வகுப்பார். 11

காலினையவித்துந்தவத்தினிலினைத்துங்கருதுதற்கரியமெஞ்ஞானப்
பாலினையுணர்ந்துமுன்னைமூன்றுகத்திற்பற்றியமுத்தியம்பயனைச்
சீலமார்கங்கைத்தெண்புனலொருகாற்சென்றுதாழ்கினர்க்களிக்கு
மாலமார்கண்டத்தொருமுதற்கடவுளமர்ந்தருளானந்தகானம். 12

நிலையறுஞ்செல்வத்திருமகளுறையுநீர்மைபாற்றுதிபலநிகழ்த்தும்
பலபெறும்பதிகள்பிறவெலாநிகரப்பண்ணவர்வாழ்வுமுண்மதியாத்
துலைபெறுமனத்தரழிவுறவென்றுந்தோய்தரவிழைவதியாதுளதவ்
வலைவறுமுத்தித்திருமகட்குறைவாமவிமுத்தமெவன்கொலோவணி
[கல். 13

இருணெறிப்பிறவித்தொடக்கறுதுழலுமிமையவர்சிலரொடு
மிணையாத், தெருணெறியருளுமுக்கணாண்டகையைத்தேர்பவர்செ
ய்கைபோன்றிம்மைப், பொருளினெறிப்புகழ்சேரேனையநகரந்தமக்
கெலாம்பொருந்துமென்றம்மை, யருணெறிக்காசித்தலத்தினையறை
தற்கஞ்சுவரறிஞர்தம்முளமே. 14

துறப்பெனுநெறியுமிகழ்ந்துபல்போகந்துய்க்குனர்முனிவரு
மெய்தும், பிறப்பிலையதனாலன்றியுமுலகிற்பெற்றவெவ்வுயிர்களும்
பேணா, மறப்பெருஞ்செயலாலேறுமவ்வானத்தமரருமூவருமிதனி,
னிறப்பதுகருதிப்பிறப்பினைவிழையுமேற்றமுமுடையதிப்பதியே 15

காதினிலுரைத்துப்பொன்புரைகமலக்கழனிழலிருப்பவெவ்
வுயிர்க்கு, மீதருள்புரியும்விமலனேயெனக்குமேலவனென்றுமுன்
றிருமால், வாதினிற்றுயர்கூர்வியாதனையுணர்த்தும்வண்ணமாதவர்
சொலக்கேட்டுப், போதுலாம்பொழிலுண்மந்திகணடிக்கும்பொரு
நரினச்செயல்பொலிய. 16

அஞ்சிறையறுகாற்றும்பியந்துணையோடயலளியுண்டசெங்கோகன்
மிஞ்சியமிச்சிலுகர்ந்தனையென்றுமென்பெடைவண்டுளத்தூடக்
கஞ்சமுற்றெறிக்குமள்ளரஞ்சேற்றுக்கழனிசூழ்காசிமாநகர்
விஞ்சியதிருநீர்க்கிடங்குமிம்மறையோரெய்தியுட்புக்கனரிறைஞ்சி.

கங்குலைவெளிசெய்நித்திலத்தொடருங்காமருகொடையபலும்
யாத்துப், பொங்குபொற்குடமும்புனைமலர்க்குறடும்பொலிதருமா
ளிகைப்புறத்தின், மங்குறேய்மாடத்தடங்கொடியெம்மூர்மாந்தரை
நிகர்க்கலிரென்று, மங்கணவாழ்நினுமென்றமரரைநோக்கித்தன்கர
மசைக்குநீண்மறுகின். 18

நிலவுமிழ்முன்றிற்பளிக்குமேனிலையினேரிழைமாதரார்வெகு
ண்டு, விலகிவில்லுமிழுமணிவடம்பலவும்விலையில்மென்றுகிலம்
பிறவும், புலவியினெறிந்தவிசையினிற்பொன்னம்பூஞ்சினைபொருத்
தலிற்புக்கே, யுலகினிற்பைங்காவரம்பையர்க்கணிபூணுதவுதலு
ண்மையாமுணரின். 19

சதுக்கமும்பரிமாநிரைகளுமூரற்காற்றந்திவாழ்சாலையுங்குறையா
மதிக்குநேர்வதனமாதராராடுமணிநிழையரங்கமும்பொதுவும்
புதுக்கவின்குலவியளிக்குலமுரலும்பூமலர்ஞானவாவியுடம்
முதுக்குறைவுடையோர்சூழ்ந்துபல்லறமுமொழிதருமுத்திமண்ட
[பமும். 20

எவ்வகையுயிர்க்குமொருவகைக்கருணையீந்திடுமெம்பிரான்சி
றிச், செவ்வரிபடரும்பெருவிழியிமையச்செல்வியோடரம்பையா
காந்தட், கையினில்மணிக்காற்கவரிமென்சிறுகாலவிழ்த்திடக்கம
லன்மால்துதிப்ப, வவ்வியவருளாலமர்ந்தபொற்குடுமிவான்றொடு
கோயிலும்பிறவும். 21

கூன்வளரமுதச்சாலியொண்டுவர்க்காய்க்கொழுமடற்கமுகென
வோங்கி, வான்வளர்நிறைஞ்சப்பூம்புனலுருட்டும்வார்மணிகன்
னிகைத்துறையு, மூன்வளர்விழிகளுவப்புறக்கண்டாய்குள்ளநெக்
குருகியக்கொழுதுங், கான்வளரமுதக்கங்கைநீராடிக்கண்ணுதலிரு
சரண்டாழ்ந்து. 22

புலவுவேற்செழியனுரைவழித்தூநீர்பொற்குடமுகந்துபூம்பழனத்
தலைவனீள்தாளிற்கிளைத்தசிற்றவிலைக்கைத்தபல்மந்தியாங்கெறியும்
பலவினீர்ஞ்சுளையிற்றூர்த்திடுங்காசிப்பதியினைவலங்கொடுபணிந்து
உலவுமுள்ளன்பாற்பிரிதாலஞ்சியொருவழிமீண்டனரொருங்கே 23

வேறு

எண்ணுபத்தாயிரத்தரியாவருநெறியிடைக்க
ணண்ணியபுனிதமாயநற்றலங்களினல்லாது
பண்ணவர்பிறவிதீர்க்கும்பயந்தனைப்படியின்வையா
தண்ணலையேத்தியெண்ணில்காவதமரிதினீந்தி. 24

போதுவாரிடையினின்றபுற்றினுட்புனிதன்செம்பொற்
றூதும்வாள்மணியும்விசுந்தண்புனற்கேழலாற்றின்
மீதுவாழ்ந்திருக்குஞ்சேனைப்பதியினைமேவிக்கங்குற்
போதுதாழ்த்தலைவெண்ணிப்புனலொடும்பொருந்தினார். 25

வேறு

அன்னதாமிரவிற்படரந்தணர்
முன்னுளோரிரண்டாயிரர்தங்களை
மன்னுதெண்புனலோடுமறைதரப்
பன்னகாபரணனுளம்பற்றினான். 26

விடியல்கண்டவவ்வேதியர்மற்றுளோ
ருடனுறைந்தவிராயிரருற்றிடு
மிடனறிந்திலராகியினைந்துளஞ்
சுடலையாடியருடுணியார்களாய். 27

நந்தியம்பதிநீந்திநடந்துபோ
யுந்துகாவிரியொண்புனனாடுபுக்
கிந்திரற்குமிறையெனவேந்திய
சுந்தரச்சுடர்மாமுடிச்சோழன்முன். 28

போயவாறும்புனல்கொடுமீண்டுதா
மேயவாறும்விளைந்தபுதுமையு
மாயவாறுமறைதரவந்தண
ரேயவாறிதுவென்னென்றிறைவனும். 29

விம்மிதத்தினிருந்துவினையுணர்
செம்மதித்தலைவோரொடுஞ்சிந்தியாத்
தம்மனத்திற்றுணிந்திலனாய்த்தளர்ந்
தம்மயாதென்றயிர்த்தமர்காலையில். 30

வேந்தன்மேவுமவையிடைமேவியோர்
சாந்தவேதியனாகியத்தம்பிரா
னேந்துமையமொழிதியிறைவநீ
போந்தவேதியர்தங்கள்பொருட்டினே. 31

தீங்கிலாமற்றிருவிடையூரினம்
பாங்கினுற்றனரேகினைபாரெனா
வாங்குணர்த்தியனையர்வியப்புற
நீங்கினான்விழியாவருநேர்கிலார். 32

இத்திறத்திவணெய்தியியம்பிய
சித்தன்வேதியனன்றெஞ்சினவிடை
யத்தனேயெனவெண்ணியதிசையித்
தொத்தமந்திரர்தம்மொடுமொல்லையில். 33

ஈரமாமதிச்செஞ்சடையெம்பிரா
னாருமத்தலத்துண்மையறிதர
றேருநெஞ்சினனாய்ச்செலவெய்தினன்
வீரவேலபயன்வினையுந்தலால். 34

மானமன்னனெழுமுனமாறிலாத்
தானைநான்குமெழுந்ததழங்கொலி
வானமீதினெழுந்தவளரியம்
போனதெங்குமெழுந்தபுவித்துகள். 35

உண்டசீர்விடையூரினையுட்கொளும்
பண்டைநற்றவப்பவினன்னாட்டினைக்
கண்டுமீளவக்காவிரிநாடெதிர்
கொண்டவண்ணங்குறிக்குமட்பூழியே. 36

பூவினங்களுக்கின்றொருபோரெனா
மாவினங்களும்வாசியினங்களுந்
தேவதேவன்றிருவருள்சேர்தவக்
காவலன்முனஞ்சென்றகடிதினே. 37

கொடியுங்குஞ்சமுங்கொற்றக்கவிகையும்
படியினிழல்செயப்படர்வுற்றனன்
புடைகொள்மாந்தரொடும்பொலந்தேர்மிசை
யிடைகொள்யாறும்பதிகளுமெய்தியே. 38

பூம்புனற்றிருநாடுகடந்துபோ
யேம்பலெய்துங்குறிகளெதிர்ந்திடத்
தேம்பிழுவினையோடத்தெளிந்துயி
ரோம்புமேனநதிக்கரையுற்றனன். 39

கல்லெனோதையினாற்படர்கானிமி
ரெல்லையில்கொடியின்குழுவோடெதிர்
புல்லரும்படையாலும்புரவலன்
செல்லுமாட்படையொத்ததச்சீர்நதி. 40

ஓடலால்வெண்ணுரையுள்ளுமிழ்தலாற்
கூடினோர்களிளைப்பறக்கோடலாற்
சாடலால்முனையுற்றவர்தங்களை
யாடல்வாம்பரியொத்ததவ்வாறரோ. 41

வரையினெய்துதலால்மிசைவார்ந்தெழு
திரையினாற்றிண்டிகிரிகளுந்தலாற்
றரையினேந்தலையேற்றலிற்றுதிரை
புரையிறேர்க்குலமொத்ததப்பொங்குநீர். 42

வேறு

மத்தவிபம்பலவுருட்டியிருகரையுஞ்செறித்ததெனவளர்ந்தும
ஞ்சின், கொத்துறங்குமணிக்குடுமிக்கல்லறைகளிடைக்கொணர்ந்து
துகிருங்கோடும், பைத்தமயிற்றோகைகளும்வெண்கவரிப்படலமு
மிட்டுணைக்கும்பான்மை, வைத்தலையினெடுங்கரத்தின்வார்ந்தொ
ழுகுமலர்நதியின்மருங்குசார்ந்தார். 43

ஆனாதபெருங்களிப்பினதிற்படிந்துசேனையொடுமமைச்சரோடும்
வானாடுதனிற்பெருகும்வரநதியேயிஃதெனவுள்வலித்தானாகி
மானாருமிடக்கரத்தோன்மங்கலையினொடுமமரும்வளமார்சேவை
தேனாருமலர்மார்பன்குடகரையிற்சென்றேறித்தெரிசித்தானால். 44

கேழனதியிரும்புனலினிழற்கிளருமெம்பெருமான்கிரிமாதோடு
மொழியினும்பெயர்கிலனாயினிதமருமாலயமுமும்பர்தாழும் [ல்
வாழியபொற்புரிசைகளுஞ்சிகரிகளும்வலம்போந்துவணங்கிமண்ணி
வீழியநற்புற்றிலிங்கப்பெருமானையெதிர்தொழுதுவிருப்பிற்போற்றி

பந்தமகல்வரநதியிற்படிந்தெய்தும்பனவர்தமிலிருயாணூற்றின்
வந்தமறைக்கிழவரெலாமவனருளினாங்குறையுவண்ணநோக்கிச்
சிந்தையுவந்திசைபாடிச்செய்யபுனற்குடமனைத்துஞ்சேவைநாத
னிந்துமுடிமிசைச்சொரிந்தாங்கதற்கியையப்பூசனையுமியற்றுவித்
[தான். 46

அந்தணருந் துயின்றெழுந்தாரெனவுணர்ந்துமற்றவரோடளவளாவிச், சிந்தைநெகிழ்ந்தினிதிருப்பமன்னவனுஞ்சில்பகலாண்டுறைந்துபின்னர், வெந்தறுகட்சேனையொடும்பிரிவரியவிடையெய்தியிறைஞ்சிவேட்கை, பிந்துமந்தாண்முந்துறத்தன்பதிநோக்கிமனமின்றிப்பெயர்வுற்றானால். 47

வேறு

பதியினெய்தியசென்னியன்பல்பகலரசு
விதியினெய்திநின்றாற்றினில்விடைநகர்ப்பெருமான்
துதிகொடாள்மலரெய்தினன்கற்பனைகழலு
மதிகொணான்பினீரன்றியுமாற்றமொன்றறைவன். 48

ஓதுமித்தலமான்மியமுணர்குனருணர்தற்
காதரத்தினரறைகுனரனைவருஞ்சேவைப்
பூதரத்துறுவில்லியைப்போற்றுனரெய்துங்
கோதிலாதவப்பெருநலன்கூடுவரென்றான். 49

மன்னுநற்றவச்சூதனோர்மரபினிற்றன்வாய்
பன்னுமிக்கதையமுதினைப்பண்ணவர்குழுவிற்
றுன்னிருஞ்செவிவாயிலாத்துய்த்தனரொன்றும்
பன்னுதற்கருமன்பெனும்பரவையுட்படியா. 50

கற்றுணர்ந்துரைசூதநீகருணையினெம்பா
லுற்றடைந்திவையோதினையாதலினுய்ந்தேம்
சொற்றநின்புகழோதுனரிலையெனத்துதியா
மற்றமாதவர்த்திரளெலாமன்னிவீற்றிருந்தார். 51

வேறு

பூவில்வாழயனுநாகணையமரும்பொன்னுறைமார்பனும்புகழ்ந்து
நாவினூற்பலவும்பன்னியேதுதிக்குநளினநேர்பதத்துணையானைப்
பாவையரணிந்தகலவைவாவிகளும்பள்ளநீரோடையுங்கமழுஞ்
சேவைநாயகனைத்துதிப்பவர்க்கெல்லாச்செல்வமுஞ்சீருமோங்கிடு
[மே. 52

சோழன்பூசித்தபடலம் முற்றிற்று.

ஆ காண்டம் 2-க்குத் திருவிருத்தம் 955.



